Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

Editor: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீராமாநுஜன் 269

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

பேருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி *—ஏழ்பாரு
முய்ய வவர்களுரைத்தவைகள் தாம்வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

ஸாதாரண ௵ மாசி ௴ 1971 பிப்ரவரி ௴

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன்—269







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவருவது

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 23 | 1971ஆ பிப்ரவரிமீ ஸாதாரணஆ மாசிமீ | ஸஞ்சிகை 2

## விசதவாக்சிகாமணிகளின் வாக்வைசத்யம்

— ஸ்ரீரங்கநாதபாதுகைக்கு விடையளிப்பு —

மணவாளமாமுனிகள் தாமருளிச் செய்துள்ள வியாக்கியான நூல்களில் பல விமர்சங்களையும் பல நிஷ்கர்ஷங்களையும் செய்தருளியிருக்கிறரென்பது ப்ரஸித்தம். எந்த விஷயத்திலும் "ஏதேஷு பக்ஷேஷு கச்சிதேகঃ ப்ரமாணவாந்" என்றுப் போலவோ "யதாப்ரமாணம் பவது" என்றுப்போலவோ கோடிகாட்டி விடுவதில்லை. "பேர்க்கவும் பேராவே" என்னும்படி அப்ரத்ருஷ்யமாயும் அவிசால்யமாயும் எழுதியருள்வது மாமுனிகளுக்குத் தனிச்சிறப்பான இயல்பு. இதனை அடியேன் நூற்றுக் கணக்கான விஷயங்களில் உபபாதித்துக் காட்டியிருப்பவன். ப்ரக்ருதம் 14—12—70உ வெளிவந்த ஸ்ரீரங்கநாத பாதுகாபத்ரிகையில் விமர்சம் என மகுடமிட்ட கட்டுரையொன்றில், ப்ரபஞ்சத்திற்கு த்ரிவித காரணமும் பரப்ரஹ்மமேயென்று வேதாந்திகளின் கோஷ்டியில் ப்ரஸித்தமாயுள்ளதொரு விஷயத்தில் சர்ச்சிக்கப் புகுந்தவொரு பண்டிதர், மாமுனிகளின் தத்வத்ரய வ்யாக்க்யானத்திலுள்ள சில பங்க்திகளை யநுவதித்து அவற்றில் பூர்வோத்தர விரோதங் காண்பதாக ப்ரஸங்கித்துள்ளார். அதனைச் சிறிது விளக்கித் தொலைக்கிறேன்.

"ஜ்ஞான சக்த்யாதி விசிஷ்டவேஷேண நிமித்தகாரணமாகிருன்—
என்பது தத்வத்ரய வியாக்கியானத்தில் மாமுனிகள் ஸாதித்தது.
இது இதற்குமுன் அவர் ஸாதித்திருப்பதற்கே விருத்தம்"

என்பது அந்த பண்டிதருடைய ப்ரதிஜ்ஞா வாக்யம், எப்படி விருத்தம் என்பதை

அவரே அடுத்தபடி ளிவரிக்கிருர். (எங்ஙனே யென்னில்;) மாமுனிகள் தாமே முன்னம் ஸாதித்திருக்கிற ஸ்ரீஸூக்திகள் இவை;

"லோகத்தில் கார்யோத்பத்தியில் காரணம் நிமித்த உபாதாந ஸஹகாரி ரூபேண த்ரிவிதமாயிருக்கும்; இதில் நிமித்த காரணமாவது உபாதான வஸ்துவைக் கார்ய ரூபேண விகரிப்பிக்கும் கர்த்ருவஸ்து; உபாதாந காரண மாவது கார்யரூபேண விகரிக்கைக்கு யோக்யமான வஸ்து; ஸஹகாரி காரண மாவது கார்யோத்பத்திக்கு உபகரணமானவஸ்து. கடபடாதிகளுக்கு குலால குவிந்தாதிகள் நிமித்தமாய் ம்ருத் தந்த்வாதிகள் உபாதானமாய் சக்ரவே மாதிகள் ஸஹகாரியாயிருக்கும்."

என்பன......"ஜ்ஞானசக்த்யாதி விசிஷ்டவேஷேண நிமித்தகாரணமாகிருன்" என்கிற முன்னுதாஹரித்த ஸ்ரீஸூக்திக்கும் "லோகத்தில்" இத்யாதி ஸ்ரீஸூக்தி களுக்கும் பரஸ்பர விரோதத்தை விளக்கிக் காட்டவேணும். பண்டிதர் காட்டி யுள்ள வகை கேளீர்;

"இங்கே கர்த்ருவஸ்து நிமித்தகாரண மெனப்பட்டிருக்கிறது. கார்யோத் பாதனத்தில் கர்த்தாவுக்குள்ள ஸங்கல்பமென்கிற இச்சைபோலே ஜ்ஞான சக்த்யாதிகளும் அவனுக்கு விசேஷணமாயிருந்து உதவுகின்றனவாகையாலே நிமித்த கரரணத்தில் அடங்கினவையேயன்றி அவனைத் தனியே யொரு காரணமாக்கமாட்டா; தண்ட சக்ராதிகளே ஸஹகாரி காரணமெனப்பட்டிருக் கின்றன; இப்படியே ஈச்வரனுக்கு ஸஹகாரியொன்று இருக்குமாகில் அது அவனைக்காட்டிலும் வேறுபட்டதாக இருக்கவேண்டுமேயன்றி ஜ்ஞான சக்த்யாதி விசிஷ்டனை குலாலனே கடோத்பத்தியில் ஸஹகாரி காரணமு மாகிருனென ப்ரஸங்கிக்கும். ஆகையால் இதற்கு விருத்தம் மேல் 'ஜ்ஞான சக்த்யாதி விசிஷ்டனுய்க் கொண்டு ஸஹகாரிகாரணமாயுமிருக்கும்' என்றது."

இப்படியாக மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் பூர்வேரத்தரவிரோத ப்ரதர்சனம் பண்டிதரால் செல்லா நின்றது. இஃது எங்ஙனே யுள்ளதென்ருல், "முகத்தை சந்திர னென்று சொன்னுல் முகத்தை க்ரஹணம் பிடித்தே தீரவேண்டும்; திருவடியைக் கமல மென்ருல் அது சேற்றில் முளைத்தே தீரவேண்டும்" என்னுமாபோலே யிருந்தது.

நிமித்தோபாதான ஸஹகாரி காரணங்களின் ஸ்வரூபத்தை விவரித்தருளா நின்ற மணவாளமாமுனிகள் முந்துறமுன்னம் லௌகிக ப்ரக்ரியையைக் காட்டினுரே யன்றி பரப்ரஹ்மப்ரக்ரியையைக் காட்டியருளினுரல்லர்; ஆனதுபற்றியே அந்த ளாக்யம் "லோகத்தில்" என்று உபக்ராந்தமாயிற்று. ப்ரபஞ்சங்களுக்கெல்லாம் பரப்ரஹ்மமே காரணபூதம் என்பது வேதாந்திகளின் கொள்கை. பொதுவாகக் காரணபூதமென்று சொல்லிவிட்டால் போதாது; கடபடாதி வஸ்துஜாதங்களுக்கு மூவகைப்பட்ட காரணங்கள் இன்றியமையாதனவாதலாலும் அவை வெவ்வேறு பட்டிருத்தலாலும் ப்ரபஞ்சத்திற்கும் வெவ்வேறுபட்ட மூவகைக் காரணங்க ளுண்டா? என்று கேள்வி எழும். எழுந்தது. இதற்கு வேதாந்திகளின் விடை;—

மூவகைக் காரணமுமுண்டு; காரணவஸ்து வெவ்வேறுபட்டிருப்பதில்லை; பரப்ரஹ்ம மொன்றேதான் மூவகைக் காரணமுமாக நிற்பது—என்று.

விசதவாக்சிகாமணிகள் தம்முடைய வாக்வைசத்யத்திற்குச்சேர (தத்வத்ரய வியாக்கியானத்தில்) இதை விளக்கி யருளுமிடத்து லௌகிக காரணங்களின் ப்ரக்ரியையை முன்னம் நிருபித்தருளியிருக்கிறார். இப்போது ப்ரத்யவஸ்தாதாவான பண்டிதர் விரோதோத்பாவனம் பண்ணுவதற்கு அணுமாத்ரமும் அவகாசமில்லை. ஏனென்றால், லோகத்ருஷ்டந்யாயத்தாலேயன்றோ விரோதோத்பாவனம் செய்யப் படுகிறது. அது வேதாந்தவாஸனை யில்லாமையினாலாயது. சாரீரகமீமாம்ஸை யில் இரண்டாமத்யாயம் முதற்பாதத்தில் க்ருத்ஸ்நப்ரஸக்த்யதிகரணமென்றொன்று அமைந்துள்ளது. அதில் * க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வசப்த கோபோ வா * என்கிற முதல் ஸூத்ரமானது லோகத்ருஷ்டந்யாயத்தாலே ஒரு பூர்வபக்ஷத்தைக் கிளப்பிற்று, மேலே ஸித்தாந்த ஸூத்ரங்கள் ஐந்து; அவற்றுள் முதலதான * ச்ருதேஸ் து சப்தமூலத்வாத் * என்கிற ஸூத்ரமானது லௌகிக ப்ரக்ரியை கொண்டு, விலக்ஷண சக்தியுக்தமான பரப்ரஹ்மத்தில் சோத்யம் செய்யலாகாது என்று அதை மறுத்தொழித்தது.

ப்ரக்ருதத்தில் பண்டிதர் என்ன சோத்யம் செய்கிறாரென்பதை மீண்டும் பார்ப்போம்; "ஈச்வரனுக்கு ஸஹகாரி யொன்று இருக்குமாகில் அது அவனைக் காட்டிலும் வேறுபட்டதாக இருக்கவேண்டுமேயன்றி அவனேயாகமாட்டான். ஆவானென்னில்; ஜ்ஞானசக்த்யாதி விசிஷ்டனான குலாலனே கடோத்பத்தியில் ஸஹகாரிகாரணமுமாகிறா னென்ன வேண்டிவரும்" என்பது பண்டிதரின் ப்ரஸஞ்ஜனம். இது மணவாளமாமுனிகளின்மீது தொடுக்கும் அம்பு அல்ல; ஆளவந்தார் தொடங்கி நிகமாந்த குருவளவாகவுள்ள ஸகல ஆசாரியர்களின் மேலும் தொடுக்குமம்பாம். * ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் நஜாநாதி * என்கிற கணக்கிலே யெழுதப்பட்ட வாக்யமன்றோ பண்டிதருடையது. "நிமித்த காரணத்தில் அடங்கினவையேயன்றி" என்றெழுதுகிற பண்டிதரின் கொள்கைப்படி நிமித்தகாரணபூதனான பரமபுருஷனிடத்திலேயே அடங்கினவையாக இருந்து விட்டதனால் என்ன குடிகெட்டுப் போய்விட்டது. ஜ்ஞானசக்தி பலைச்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களாகிற ஷாட்குண்யத்தில் தேஜஸ்ஸென்கிற ஆறாவது குணத்தின் தன்மையை நிருபித்தருளாநின்ற பட்டர், "ஸஹகார்யபேக்ஷமபி ஹாதுமிஹ ததநபேக்ஷகர்த்ருதா, ரங்கதந: ஜயதி தேஜ இதி ப்ரணதார்த்திஜித் ப்ரதிபடாபி பாவுகம்" என்றருளிச் செய்துள்ளார். ஸர்வேச்வரன் ஸர்வாத்மநா ஸஹகாரி நிரபேக்ஷன் என்பது நிர்விவாதம். ஆனாலும் ஸஹகாரி வேணுமாகில் அவனது திருக்குணங்களான ஜ்ஞான சக்த்யாதிகளையே ஸஹகாரியாகக் கொள்ளவடுக்கும்— என்பதுதான் வேதாந்திகளின் கொள்கை. குயவன் பானையைப் பிறப்பிப்பதில் தண்ட சக்ராதிரூபங்களான தனிப்பட்ட வஸ்துக்களைத் துணைக்கருவியாகக் கொள்வதுபோல ஸர்வேச்வரனும் தன்னிற்காட்டில் வேறுபட்ட சிலவஸ்துக்களைத் துணைகொள்ள வேண்டிவருமென்று ஆபாதனம் செய்வது ஜம்பூத்வீபே பாரத வர்ஷே பரதகண்டே மேரோர் தக்ஷிணே உத்தரேபிச பார்ச்வே விலைசெல்லுமதன்று.

இதற்குமேலெழுதுகிறார் பண்டிதர்—"(தத்வத்ரய மூலத்தில்) 'காலத்துக்கும் அந்தர்யாமியாய்' என்று காலம் கூறப்பட்டிருக்கின்றது; இங்கெல்லாம் ஸ்ருஷ்டிக்கபேக்ஷிதமான காலத்துக்கும் ரக்ஷணோபயோகியான காலத்துக்கும் என்று உரையிடுகிறார் மாமுனிகள்; ஆகிலும் இப்படி அபேக்ஷிதமான காலத்திற்கு அந்தர்யாமியாயிருந்து ஈச்வரன் ஸஹகாரியாகிறான் என்று மூலத்தின் கருத்தை க்ரஹிக்காமல் இருந்துவிட்டார்" என்று.

இவரைக் கேட்கிறோம்; க்ரஹித்திருந்தால் மாமுனிகள் ஸாதித்தருளும் ஸ்ரீஸூக்தி எப்படியிருந்திருக்கும்; க்ரஹிக்காமல் விட்டதனாலே எப்படியிருக்கிறது? என்று. இக்கேள்விக்கு வாய்திறக்கவுண்டோவழி? வாசிப்பவர்களுக்கு விஷயம் நன்கு விளங்கவன்றோ எழுதவேண்டும். இதை மேலே விவரிப்போம்.

மேலும் எழுதுகிறார் பண்டிதர்—

"இதுமட்டுமன்றி ஸஹகாரி காரணத்வம் சொல்லப்படவில்லையென்றும் ஸர்வஜ்ஞத்வாதிகுணயோகம் சொன்னதனாலேயே அது ஸித்திக்குமென்றும் ஸாதிக்கிறார்"

என்று. இது மொட்டையாக விடப்பட்டிருக்கிற வாக்யம். பண்டிதரே! இந்த வாக்யத்தை எதற்காக எழுதியுள்ளீரென்று கேட்டால் "பச்யேம சரதச் சதம், ஜீவேம சரதச் சதம்' என்று சொல்லிக்கொண்டு வானம் நோக்குவரத்தனே. 'மாமுனிகள் பூர்வோத்தர விருத்தமாக ஸாதித்திருக்கிறா'ரென்று தாம் எழுதினதற்கு உபபாதகமாக இதனை யெழுதினரா? அல்லது இதுவொரு தனிதூஷணம் என்றெழுதினரா? என்பது கேள்வி, தத்வத்ரயே 170-ஆம் சூர்ணையின் வியாக்கியானத்திலே "இப்படி நிமித்தோபாதான காரணத்வங்களைச் சொல்லி ஸஹகாரி காரணத்வம் சொல்லாதொழிந்தது ஸர்வஜ்ஞத்வாதி குணயோகம் கீழே சொல்லுகையாலும் நிமித்தோபாதானங்களுக்கு ஐக்யம் சொல்லுகையாலும் தன்னடையே ஸித்திக்குமென்னு மத்தாலே; ஆகையிறே வேதாந்த ஸூத்ரத்திலும் இது விசேஷித்துச் சொல்லாதொழிந்தது" என்று மாமுனிகளருளிச்செய்துள்ளார்; இதை இவர் ஸாதகமென்கிறாரா? பாதகமென்கிறாரா? இங்கு இவருடைய மருளை விளக்குவோம்; "ஸஹகாரிகாரணத்வம் சொல்லாதொழிந்தது" என்றிங்ஙனே மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியிருக்க, அதை அப்படியே அநுவதியாமல் 'ஸஹகாரிகாரணத்வம் சொல்லப்படவில்லை யென்கிறார்' என்றெழுதியுள்ள இவர்க்கு—எம்பெருமான் ஸஹகாரிகாரணமுமாகிறான் என்பதை எந்த சாஸ்த்ரமும் சொல்லியிருக்கவில்லை யென்று மாமுனிகள் திருவுள்ளம் பற்றுகிறாரென்று கருத்தாகவேணும். நன்று நன்று மிக நன்றே,

தடஸ்தவித்வன்மணிகளே! பாதுகாபத்ரிகையில் இந்த சர்ச்சை இப்போது எதற்காகக் கிளர்ந்ததென்பதைச் சிறிது தெரிவிக்கிறேன். ஸ்ரீராமாநுஜன் 260ல் "திருத்திக்காட்டுவதைத் தீயதாக நினையார் பெரியார்' என மகுடமிட்டு அதன்கீழ் நாமெழுதியிருந்ததாவது—"வைதிக வுலகுக்குப் பயன்படுமாறு வெளிவரும் மாதாந்தப் பத்திரிகைகள் மிகச்சிலவே; அவற்றுள் ஒன்றான ஸ்ரீரங்கநாத பாதுகா

பத்திரிகையைப பற்றி இங்குச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன்; இப்பத்திரிகை ஸ்ரீமத் ஆண்டவன் அநுக்ரஹத்தினுல் வெளிவருவதென்பதை உலகமறியும், வர்த்தமாந ஸ்ரீமதாண்டவன் மஹா ஜ்ஞான நிதி யென்பதை அடியேன் பலகால் வெளியிட்டிருக்கிறேன். உண்மையில் உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யரென்கிற விருது இந்த ஸ்வாமிக்கு மிக ஏற்கும் தாம் அநுக்ரஹித்து நடத்திவரும் பத்திரிகையில் எவ்விதமான பிழையும் புகாதபடி அவதானங்கொள்ள வேண்டிய பொறுப்பு ஸ்வாமியைச் சேர்ந்தது. இதைச் சில ஸமயங்களில் நேரிலும் விஜ்ஞாபித்திருக்கிறேன். இனி நானே நேரில் கவனித்துக் கொள்ளுகிறேன்; கட்டுரைகளையும் நானே பெரும்பாலும் எழுதியனுப்பப் பார்க்கிறேன்' என்று திருவுள்ளமுகந்து ஸாதித்தருளினுர். ப்ரக்ருதம் 15—6—70ல் வெளிவந்த ஸாதாரணஷ ஆனி மாதப் பத்திரிகையைக் கையில் வைத்துக்கொண்டு சில பல விண்ணப்பங்கள் செய்கிறேன். "ஸ்காவித்யே சாஸிதாரம்" என்று தேசிகனருளிச் செய்த முறையில் அன்று அன்று அன்று அதற்கு அதிகாரியுமல்லேன். "செய்வன திருந்தச் செய்" என்பதில் நெடுநாளாகவே மிகவூக்க முடையேனடியேன். அபரிமியமான பணச் செலவு செய்து நிகழ்த்துங்காரியம் ஒழுங்காக அமைய வேண்டுமென்பதொன்றே முக்கியமான நோக்கமெனக்கு" என்றெழுதினேன்; மேலும்பல எழுதியிருந்ததாவது.

"அடுத்தபடியாக 'காரணமென்பது நிமித்தம் உபாதானம் ஸஹகாரி என்று முவகைப்படும்" என்று ப்ரதிஜ்ஞை. இது அழகியதே. உடனே இதை உபபாதிக்கும் வழி வேதாந்த மார்க்கத்திற்கும் க்ராந்திக சைலிக்கும் சிறிது மிணங்கியதன்று; ஸ்வாமி தேசிகன் அச்யுதசதகத்தில் (ப்ராக்ருத பாஷையில்) *புரிஸபஹாண ஸரீரோ...* (சாயை) *புருஷப்ரதாந சரீரோ புவநாநாம் பவஸி அச்யுத! உபாதாநம், நிஜஸங்கல்பஸநாதஃ வஹஸி நிமித்தத்வமபி அத்புதசக்திஃ* என்றருளிச் செய்த வொரு ச்லோக ரத்னத்தைச் சிந்தனை செய்துகொண்டு அதே வழியில் இரண்டே வரியில் பெண்களும் பேதைகளுமறியும்படி எளிதாக எழுதியிருக்கலாம். "*பஹுஸ்யாம் என்கிற ஸங்கல்ப விசிஷ்ட வேஷேண நிமித்தகாரணமாகிருன்; நாமரூப விபாகயோக்யதையின்றிக்கே தன்னோடே கூடிக்கிடக்கிற ஸூக்ஷ்ம சேதநாசேதந விசிஷ்டவேஷேண உபாதாநகாரணமாகிருன்; ஜ்ஞானசக்த்யாதி விசிஷ்ட வேஷேண ஸஹகாரி காரணமுமாகிருன்';—என்று இங்ஙனே யெழுதியிருக்கவேணும். ஸ்ருஷ்டி முதலானவைகளில் தனக்குத் துணையாக காலம் முதலிய தத்வங்களில்தான் அது ப்ரவேசித்து அவைகளை உபயோகப் படுத்திக் கொள்வதால் அவனே ப்ரபஞ்சத்துக்கு ஸஹகாரி காரணமுமாகிருன்" என்று அசடு பிசடாக எழுதியிருப்பதை ஸ்ரீமதாண்டவன் கடாக்ஷித்தருளவேணும். "அது ப்ரவேசித்து" என்றுல் எது ப்ரவேசிக்கிறதென்று கேள்விவரும். "இல்லையில்லை, இங்கு அச்சுப் பிழை; அதுப்ரவேசித்தென்று திருத்தவேணும்" என்றுலும் அசட்டு வாக்யமேயாமிது. வேதாந்த பரிசயமுள்ளவர் இப்படியெழுதார்" என்று.

இங்ஙனே நாமெழுதியிருந்ததைப்பற்றின விமர்சம் இப்போது பாதுகா பத்திரிகையில் வெளிவந்துள்ளது. சென்ற ஆனிமாதத்துப் பத்திரிகையில் 'ஸ்ருஷ்டி முதலானவைகளில் தனக்குத் துணையாக காலம் முதலிய தத்வங்களில் தான் அது

ப்ரவேசித்து அவைகளை உபயோகப்படுத்திக் கொள்வதால் அவனே ப்ரபஞ்சத்துக்கு ஸஹகாரி காரணமுமாகிறான்'' என்றெழுதப்பட்டிருந்ததை அசடுபிசடாக எழுதினதாய் நாம் ஸ்ரீராமாநுஜனில் வரைந்திருந்ததற்கு இவர்கள் நேர்நின்று விடையிறுக்கவேணும். ''அது அசடு பிசடாக எழுதப்பட்டதன்று, சமத்தாகத்தான் எழுதப்பட்டது'' என்று பலரும் தெளிய எழுதவேணுமிவர்கள். இதில் என்ன எழுதியிருக்கிறார்களென்றால், ஸ்ரீமந்நிகமாந்த குருவின் சில்லரை ரஹஸ்யங்களுள் ஒன்றான தத்வத்ரய சுளகத்தில் ''இவன் தானே ஸஹகாரிபூதகாலாதிகளுக்கும் அந்தர்யாமியாய் நின்று ஸஹகாரியுமாம்'' என்று ஸாதித்திருக்கிறாராம். அதைத்தான் பாதுகா பத்ரிகை எழுதியிருக்கிறதாம். ஆகவே அசடுபிசடு ஒன்றுங் கிடையாதாம். இது விப்ரலம்பக வாக்யமித்தனை. நம்மாலே அசடு பிசடென்னப்பட்ட வாக்யம் பண்டிதரால் முதலில் உள்ளபடி அநுவதிக்கப்பட்டிருப்பதையும், தத்வத்ரய சுளகஸூக்த்யுதாஹரணத்திற்கு முன்னே மாறுபாடான முறையில் அநுவதிக்கப் பட்டிருப்பதையும் ஸஹ்ருதயர்கள் நோக்கவேணும்.

> ''ஸ்ருஷ்டி முதவானவைகளில் தனக்குத் துணையாக காலம் முதலிய தத்துவங்களில் தான் அநுப்ரவேசித்து அவைகளை உபயோகப்படுத்திக் கொள்வதால்அவனே ப்ரபஞ்சத்துக்கு ஸஹகாரி காரணமுமாகிறான்'

என்பது பாதுகையிலுள்ள பங்க்தி. இதைத்தான் நாம் அசடுபிசடென்றோம். இப்போது விடையிறுக்க வந்திருக்கும் பண்டிதர் இதை முதற் பக்கத்தில் உள்ளபடியே அநுவதித்திருக்கின்றார். அது நம்முடைய வாக்யாநுவாதஸ்தலமாகையாலே அப்படியே அநுவதிக்க வேண்டியது விதியாயிற்று. மேலே (பக்கம் 12 முதல் வரியில்)

> ''இனி, காலாதிகளில் அந்தர்யாமியாயிருந்து ஸஹகாரியுமாகிறரென்று பாதுகையில் கூறப்பட்டிருப்பது ஸாக்ஷாத் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்திருக்கும் விஷயம்''

என்று பாதுகா வாக்யத்தைத் திரித்துக் காட்டியிருப்பது ஆர்ஜவமன்று. ஸாக்ஷாத் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்தபடியே பாதுகா பத்ரிகை யெழுதியிருக்குமாகில் அசடுபிசடென்று நாம் ஏதுக்கு எழுதப்போகிறோம். ஒருகாலு மெழுதமாட்டோம் பரமபுருஷன் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களில் காலத்துக்கும் அந்தர்யாமியாயிருக்கும்படியைப் பிள்ளை லோகாசார்யருடைய (தத்வத்ரயாதி) ஸ்ரீஸூக்திகளையடியொற்றித்தானே தேசிகன் ஸாதித்தது. காலாந்தர்யாமித்வத்திலே யாருக்கு என்ன விப்ரதிபத்தியுள்ளது? நாம் அஸங்கதமானதென்று எழுதாமல் அசடுபிசடானதென்று எழுதியிருப்பதை ஊன்றி நோக்கிற்றிலர் இவர்கள். ''காலம் முதலிய தத்துவங்களில் அநுப்ரவேசித்து'' என்றவளவோடு பாதுகை நின்றிருக்குமாகில் அசடு பிசடென்ன ப்ரஸக்தியேது? ''அவைகளை உபயோகப்படுத்திக் கொள்வதால்'' என்று ஊடே யெழுதியிருப்பதையன்றோ நாம் அசடுபிசடென்றது. அது அசடுபிசடுதானென்பதைப் பண்டிதரும் உணர்ந்துகொண்டதனாலன்றோ அந்த அசட்டுவாக்யத்தைத் தான் தொடாமல் தள்ளிவிட்டு ஏகதேசத்தை யநுவதித்துவிட்டு ''இது ஸாக்ஷாத் நிகமாந்த தேசிகன் அருளிச்செய்திருக்கும்

விஷயம்'' என்றெழுதுகிறார். இதெல்லாம் நிக்ரஹஸ்தானத்திற் சேர்ந்ததல்லவா? ஸௌக்ய்யரஸாயநமான கரணத்ரயஸாரூப்யத்தை விடலாமா? ''கிங்குர்வதே தஸ்ய கிரோ யதார்ஹம்'' என்கிற ஸ்ரீஸூக்திச் சாயையிலே யெழுதியிருந்தால் அசடுபிசடென்ன ப்ரஸக்தியுண்டோ?

ஸ்ரீராமாநுஜன் 260ல் இதுபற்றி நாம் எழுதினபோது ''புரிஸபஹூன ஸரீரோ'' என்கிற அச்யுத சதக ச்லோகத்தை யெடுத்துக்காட்டி யிருந்தோம். அதற்குப் பண்டிதர் எழுதுகிறார்—''அச்யுதசதக ச்லோகத்தில் உபாதாநத்வமும் நிமித்தத்வமும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறதேயன்றி ஸஹகாரி காரணத்வத்திற்கு ஸூசனமுமில்லை'' என்று. அந்த ச்லோகத்தில் ''நிஜஸங்கல்பஸநாத:'' என்றதற்கு இதிலே தான் நோக்கென்று நாம் ஸ்வாசார்யர் பக்கலிலே கேட்டிருந்தோம். இவர் கேட்டிருந்திலராகில் சேதமென்? ஸ்வாமிதாமே ''கிம் வா கரீச க்ருபணே'' என்னும் சுலோகத்திலே ''நந்வஸ்தி விச்வபரிபாலந ஜாகரூக: ஸங்கல்ப ஏவ பவதோ நிபுணஸ் ஸஹாய:'' என்கிறார். இங்குப் பூர்வார்த்தத்தில் ''பாஹ்ய ஸஹகாரி கவேஷணேந கிம்?'' என்று ஸாதித்து, அந்த ஸஹகாரிபத பர்யாயமாகவே உத்தரார்த்தத்தில் ஸஹாய: என்றிட்டருளினர். ஆக அங்கு எந்த ஸங்கல்பத்தை ஸஹகாரியென்றாரோ அந்த ஸங்கல்பத்தையே இங்கும் (அச்யுத சதகேபி) ஸாதிக்கின்றாரென்று மஹதாம் ஸவிதே ச்ருதம்.

ப்ரதாந சர்ச்சை முற்றுப் பெற்றது. மற்றும்பல சிறு விஷயங்களும் ப்ரக்ருத பாதுகையில் பண்டிதரால் ப்ரஸங்கிக்கப் பட்டுள்ளன; ப்ரத்யுக்தியென்று வந்தால் நாம் ஏகதேசமும் விட்டுத் தொலைப்பதில்லை யன்றோ? ஆகவே எழுத்தெழுத்தாக வெடுத்து அலசியலசி அலம்பிக் கவிழ்த்திடுவோம். முன் பாதுகையில்—''அகாரத்திலும் நாலாம் வேற்றுமையை ஏற்றுக்கொள்வது உசிதம்'' என்றொரு வாக்யம் எழுதப்பட்டிருந்தது. ''இது சாஸ்த்ரஜ்ஞர் எழுதக்கூடியதன்று'' என்று அதை நாம் பழித்திருந்தோம் ஏற்றுக் கொள்வதற்குக் கர்த்தா யார்? என்று கேட்கிறோம். பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படியில் ''இதிலே சதுர்த்தி ஏறிக் கழியும்'' என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்தியை நோக்கி யெழுதப்பட்ட வாக்யமிது. அகாரத்திலே நாலாம் வேற்றுமையை யார் ஏற்றுக்கொண்டார்? இதற்கு ப்ரக்ருத பாதுகை நேரான வழியில் விடை கூறமாட்டாமல் நம்முடைய ப்ரயோகமொன்றை யெடுத்துக்காட்டி நம்மைக் கேள்வி கேட்டிருக்கிறது. (அதாவது) ஸ்ரீராமாநுஜனில் ''ச்சாந்தோக்யத்தில்......என்றோதிற்று; மற்றோருபநிஷத்திலும்......என்றோதிற்று'' என்று நாம் எழுதியிருக்கிறோமாம். ஓதினதற்குக் கர்த்தா யார்? எது? என்று கேட்கிறார் பண்டிதர் இதோ விடையிறுக்கிறோம். ஓதிற்று என்பதற்கு ஓதப்பட்டதென்கிற பொருள் ஸர்வநிர்விவாதம். தேவகி பெற்றமகன், தயரதன் பெற்றமகன் ...என்றால் தேவகியாலே பெறப்பட்ட மகன், தயரதனால் பெறப்பட்ட மகன் என்று பொருள்படுவது மிக வெளிது பெற்றமகன் என்றால் மகனை பெற்றான்? என்று கேள்வி எழுந்தேதீரும். நம்மாழ்வார் கொண்டபெண்டிர் என்கிறார். கொள்ளப்பட்ட பெண்டிரைக் கொண்ட பெண்டிர் என்றார். தேசிக ரஹஸ்யங்களை யெடுத்து

ஸேவித்தால் இத்தகைய ப்ரயோகங்கள் பலபல காணலாம். இலக்கண நூல்களில் நன்கு பொருத்தப்பெற்ற பிரயோகங்களிவை. "அகாரத்தில் வேற்றுமையை ஏற்றுக் கொள்வது உசிதம்" என்ற பிரயோகத்தைப் பொருந்தவைக்க ஒரு இலக்கணமும் கிடைக்காதே. வக்தாவின் விவக்ஷை யென்ன? ஔசித்யமென்ன? என்று சிறிது ஆராய்ந்தால் இது அசட்டு வார்த்தைதானென்று எளிதாக இசையலாகும்.

திருவாய்ப் பாடியில் வளர்ந்த கண்ணபிரான் தயிர் வெண்ணெய் முதலியன களவு செய்ததற்காக அவனை ஆய்ச்சியர் தாம்பினுல் கட்டியடித்ததாக ஆழ்வார்கள் பலரும் பேசிவைத்தார்கள். *ஒளியா வெண்ணெயுண்டானென்று உரலோடாய்ச்சி ஒண்கயிற்றால், விளியாவார்க்க ஆப்புண்டு விம்மியழுதான்* (பெரியதிருமொழி) என்பது முதலான பாசுரங்கள் கண்ணனை ஆய்ச்சிகள் கட்டிப் பொகட்டதாகக் காட்டுகின்றன. மதுரகவியாழ்வா ரொருவர்தாம் "கண்ணிநுண் சிறுத்தாம்பினுல் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்" என்ருர். கட்டப்பட்ட பெருமாயனல்லன்; தன்னைத்தானே கட்டுவித்துக்கொண்ட பெருமாயன் என்றபடி. இதில் சுவை மிகுதியைக் கண்ட நம் தேசிகன் யாதவாப்யுதயத்தில்—*முஹு: ப்ரவ்ருத்தம் நவநீத சௌர்யே வத்ஸாந் விமுஞ்சந்தம் அதோஹகாலே, உலூகலே குத்ரசித் ஆத்தபுண்யே பந்தும் ஸ தாம் பந்துமியேஷ மாதா* என்று முன்னம் ஸாதித்து, உடனே * ஆநீதமக்ரே நிஜபந்தநார்த்தம் தாமாகிலம் ஸம்ஹிதமப்யபூர்ணம், நிரீக்ஷ்ய நிர்விண்ணதியோ ஜநந்யா: ஸங்கோச சக்த்யா ஸ பபூவ பத்ய: * என்று ஸாதித்தார், (பத்தோ பபூவ) என்னுதே (பத்யோ பபூவ) என்றருளிச்செய்ததன் சுவையை ஆரே யறிகிற்பார்? நாமேயறிகிற்போம். இவ்வண்ணமாக "அகாரத்தில் நாலாம் வேற்றுமை ஏறியிருப்பதாகக் கொள்வது உசிதம்" என்னுதே (ஏற்றுக் கொள்வது உசிதம்) என்றதில் ஏதேனும் சுவை காட்டலாகுமோ? எங்கிருந்து காட்ட இயலும்.

## அடுத்தவிஷயம்—ப்ரஹ்மபதம்

முந்தின பாதுகா பத்ரிகையில் (பக்கம் 6ல்) "தேஜோரூபியான ப்ரும்மமாகிய உன்பொருட்டு' என்றொரு வாக்யங் கண்டோம் அதைப்பற்றி நாம் எழுதியிருந்ததாவது—

"எழுதுகிறவர்களென்று கிளர்ந்தவர்களுக்கெல்லாம் இப்படியா ஒரு ப்ரமம்? எத்தனையோ வருஷங்களுக்கு முன்பு மறைந்த சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் முதற்கொண்டு ஏறக்குறைய இருபது வித்வான்கள் இதைப்பற்றிக் கண்டிக்கப் பட்டிருக்கின்றார்களே! "இவன் திருந்தியா நாம் திருந்துவது' என்று ப்ரும்மம் ப்ரும்மம் என்றெழுதிப் போய்ச் சேர்ந்தவர்கள் பலர்; ஜீவித்திருப்பவர்களும் பலரே; (ப்ரஹ்ம) என்கிற வடசொல்லில் இல்லாத உகரம் தமிழில் எப்படி வருமென்று ஆராய்ச்சிசெய்ய மதியில்லையே யிவர்களுக்கு' என்று,

கூர்மதியீர்! ப்ரும்மம் என்று பாதுகையில் எழுதினது பிழையற்றதே யென்று ஸமர்த்திக்க ஸாமர்த்யமிருந்தால் பண்டிதர் இதைத் தொட்டு எழுதவேண்டும்;

இல்லையேல், நம்முடைய பல நூல்களில் காட்டியுள்ள பல நூறு விஷயங்களில் இவர்கள் அத்ருஷ்டிமபிநீய இருப்பதுபோல் இதிலும் இருந்துவிடுவது யுக்தம். கௌரவமுமாகும். ப்ரக்ருத பண்டிதர் (பக்கம் 13ல்) [3. ப்ரஹ்மபதம்] என மகுடமிட்டு, நாமெழுதியிருந்த பல பல வார்த்தைகளில் ஒன்றிரண்டை மட்டும் அநுவதித்துக்காட்டி, (அதாவது) "அடியேனுடைய நூல்களை அல்லும் பகலும் அநுபவிப்பார்க்கும் இத்தகைய மருள் எப்படி வந்ததோ தெரியவில்லையே (பக்கம் 83)" என்றிவ்வளவே அநுவதித்துக் காட்டிவிட்டு மேலே ஆச்சரியமாக எழுதியுள்ளார் பண்டிதர்; என்னவென்றெழுதியுள்ளார்?

'ஸ்வாமியினுடைய நூல் ஒன்றையும் எவரும் பிரித்துப் பார்ப்பதேயில்லை யென்பதற்கு இது ப்ரபலஸாக்ஷி'

என்றெழுதியுள்ளார். இந்த வாக்யத்தின் கருத்தை உள்ளபடி யுணர்வாரில்லை; உணர்த்துகிறோம்; மிக்க ஆர்ஜவத்துடனும் அநுதாபத்துடனும் இந்த வாக்கியத்தை யெழுதியுள்ளார் இப் பண்டிதர். 'இவருடைய' என்றோ 'இதினுடைய' என்றோ எழுதாமல் ஸ்வாமியினுடைய என்றெழுதச் செய்தது ஹார்தபக்தி. அதற்குச் சேர என்ன தெரிவிக்கிறரென்னில் "ஸ்வாமி லோகோபகாரமாகப் பலபல நூல்களை யியற்றி, பண்டிதவுலகம் தெளிவதற்காகப் பண்டிதர்களுக்கெல்லாம் அனுப்பியிருந்துங்கூட ஒன்றையும் ஒருவரும் பிரித்துப் பார்ப்பதுங்கூட இல்லாமல் பகல் கண்ட குழியிலே இரா விழுவாரைப் போலன்றிக்கே பகலிலேயே விழுந்து மடிகிறார்களே! என்று தமது நாபிநிறைந்த நிர்வேதத்தைத் தெரிவித்தாராகிறார். "இப்படியல்ல, இங்ஙனேயல்ல; இந்த ஸ்வாமியினுடைய நூல்களில் பண்டிதர்கள் தெளிய வேண்டிய விஷயம் எதுவுமில்லாமையாலே இவருடைய நூல்களைக் கண்ணெடுத்துப் பார்ப்பாருமில்லை என்று அவஹேளனமாக எழுதினதே யொழிய வேறல்ல" என்று சிலர் சொல்லப்பார்ப்பது சிறிதும்பொருந்தாது. ஏனென்னில்; ஊன்றிக் கேண்மின். பாதுகையிலும் மற்றும் பண்டிதர்களின் கட்டுரைகளிலும் ப்ரும்மம் ப்ரும்மம் என்று எழுதப்படுவது ஸமஞ்ஜஸந்தானென்று ஸமர்த்திக்க இவர் முன்வரவில்லை; அப்படி யெழுதுவது அறியாமைதான் என்பதைத் தமது கையால் ப்ரஹ்மபதம் என்றெழுதும் முகத்தால் காட்டிவிட்டார் இதுகிடக்க; இவருடைய நூல்களை யெடுத்துப் பார்த்தால்

"ஸ்ரீராமாநுஜன் 132ல், ஸ்ரீராமாநுஜன் 212ல், ஸ்ரீராமாநுஜன் 256ல் இத்தனையாவது பக்கத்தில் இத்தனையாவது வரியில் ................"

என்றெடுத்துக் காட்டப்படுவதை அஸக்ருத் காணலாம்; காண்கிறோம், காண்கிறீர்கள். "ராஜகுமாரனுக்குப் பிடிதோறும் நெய்யொழியச் செல்லாதாப்போலே" என்று நம் ஆசாரியர்கள் அருளிச்செய்வதுபோல நம் ஸ்ரீராமாநுஜனும் மற்றும் நமது நூல்களுமொழியச் செல்லாதே இவர்களுக்கு. தேசிகன் ஸங்கல்ப ஸூர்யோதயத்திலே "திஷ்டது குணவமர்ச:...... தோஷாநு சிந்தநார்த்தா ஸ்ம்ருதிரபி தூரீகரோதி வைராக்யம்" என்று அற்புதமாக அருளிச்செய்கிறார். அதே போல தோஷாந்வேஷணார்த்தமாக இவர்கள் நமது நூல்களை அவ்வோவிடங்களில் யாசித்துப் பெற்று மூடிமறைத்து வைத்துக்கொண்டு நோக்கினுலும் இவர்களது (ஒரு) வைராக்

யம் ஒரு நொடியில் பாறிப்பறந்தொழிகிறது காணீர். ஸஹ்ருதயவரேண்யர்களான ஸ்ரீமத் கோமல்ஸ்வாமி போல்வார் நேரிலும் எழுத்திலும் ஸாதிப்பது "தேவரீருடைய ஏதேனுமொரு நூலை ஆமூலாக்ரம் அதிகரித்துவிட்டால் பல நூல்களைப் பல வருஷ காலம் பயின்று பெறவேண்டிய தெளிவுகளை எளிதில் பெற்றுவிடலாம்" என்று. இது தற்புகழ்ச்சி எனினும் "தன்னை மறுதலை பழித்த காலையும், தன்னுடையாற்ற லுணராரிடையினும், தன்னைப் புகழ்தலும் தகும்" என்று நன்னூலாசிரியர் உரைத்தபடி இஃதொக்குமென்க. இனி, மேல் விஷயத்திற் செல்வோம்.

முக்கியமாக ஒன்று தெரிவிக்கிறோமிங்கு. பாதுகா பத்ரிகையில் நாம் குற்றங் குறைகள் காட்டி ஆறு மாதங்களுக்கு மேலாயிற்று. அவற்றைப் பரிஹரிக்க முன் வரவேண்டியவர் யார்? அந்தக் கட்டுரைகளை யெழுதியவர் யாரோ அவர் முன்வர வேண்டும். அவர் முன்வரவில்லை; அவர் இன்னாரென்றும் தெரியவில்லை. வேறொரு பண்டிதர் வெளிவந்தார். இவர் நன்னெறியில் நின்று பரிஹரிப்பவரா யிருந்தால், இவர் தாம் தமது கட்டுரையில் தொடக்கத்தில் "1. மூன்றுவித காரணம்" என்று மகுடமிட்டதற்குச் சேர—அந்த விஷயத்தில் நாம் கூறின அவத்யத்தைப் பரிஹரிக்க

"பாதுகையில் கூறப்பட்டிருப்பது ஸாக்ஷாந் நிகமாந்த மஹா தேசிகனருளிச்செய்திருக்கும் தத்வத்ரய சுளகத்திற்கு இணங்கியது"

என்றெழுதி விவரிப்பதோடு நின்றிருக்க வேண்டும். "மணவாள மாமுனிகள் பூர்வோத்தர விருத்தமாக எழுதி வைத்திருக்கிறார்" என்று ஊடே ப்ரஸங்கித் திருப்பது அநவஸரம். அப்படியிருந்தும் ப்ரஸங்கித்திருப்பது எதனாலென்னில்: இவர்கள் ஆதரிக்கும் நூல்களில் பேர்க்கவும் பேராத முரண்பாடுகளை நாம் பரச்சதம் விவரித்திருப்பதனால் அவற்றுக்கு ஸமாதானம் எழுதமுடியாத வருத்தத்தை ஒருவாறு தணித்துக்கொள்ள இத்தகைய ப்ரஸங்கத்திலே இறங்கினார்கள் என்பது தான் தத்துவம். மணவாள மாமுனிகளின் திவ்யஸூக்திகளில் பூலோக ப்ருஹஸ் பதியென்று ஒருவர் வந்தாலும் எவ்விதமான அவத்யமும் அணுவளவும் நெஞ்சா லும் நினைக்க முடியாதென்பதைக் குடப்பாம்பில் கையிட்டுரைப்போம். இங்கு ப்ராசீனமான இதிஹாஸமொன்று கேண்மின் :

ஸ்ரீ காஞ்சீபுரியில் எண்பது வருஷங்களுக்கு முன்னே ஸ்ரீமத் திருப்புட்குழி யப்பாஸ்வாமி யென்கிற மஹான்—மஹாமஹோபாத்யாய ஸ்ரீக்ருஷ்ண தாதாசார்ய ஸ்வாமி எழுந்தருளியிருந்தார். உண்மையாகவே அவரை சதுச்சாஸ்த்ர வித்வா னென்று பலரும் பகர்வர். அப்பய தீக்ஷிதர்க்கு நாராயணத்வேஷம் போலே அவர்க்கு ஸ்ரீமத் வரவரமுநித்வேஷம் ஜன்மஸித்தமா யிருந்தது. ஒருநாள் தம்மு டைய காலக்ஷேப கோஷ்டியில் ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்தில் ஒரு ஸ்ரீஸூக் தியை யெடுத்து அட்டஹாஸமாக தூஷித்தாராம். (அதன் விவரணம் கேளீர்;) ஸ்ரீவசனபூஷணத்தில் 162 ஆம் சூர்ணிகை ஹாரோபி என்னுமிவ்வளவே இது ஸ்ரீராமாயணச்லோகம். பெருமாள் அருளிச்செய்தது. "ஹாரோபி நார்ப்பிதஃ கண்டே ஸ்பர்ச ஸம்ரோதபீருணா, ஆவயோரந்தரே ஜாதாஃ பர்வதாஸ் ஸரிதோ

த்ருமா:" என்பது பூர்ணச்லோகம். (இந்தச்லோகம் ஸ்ரீராமாயணத்தில் பல பதிப்புக்களில் காணப்படுவதில்லை. அது நிற்க.) இந்த ச்லோகத்தை வியாக்கியானித்தருளாநின்ற மணவாளமாமுனிகள் "பீருணு என்கிற லிங்க வ்யத்யயம் ஆர்ஷம்" என்று முந்துற முன்னம் அருளிச்செய்து, உடனே "அன்றிக்கே, லிங்கானுகுணமாகப் பெருமாள் தம்மளவிலே யோஜிக்கவுமாம்" என்றருளிச் செய்துள்ளார். இங்கு என்ன விஷயமென்றால், (ஸ்ரீராமாயண) மூலத்தில் கர்த்ருபதம் ஸ்பஷ்டமாக இல்லை. "பீருணு ஸீதயா, பீருணு மயா" என்று இரண்டு படியும் விவக்ஷிதமாகலாம். இதில் ப்ரதமகல்பம் ஸ்வரஸமாகையாலே மாமுனிகள் பீருத்வத்தைப் பிராட்டியிடத்திலே யாக்கி முன்னம் வியாக்கியானித்தருளினர். அங்ஙனேயாகில் (ஸ்த்ரீலிங்கருபம்) பீர்வா என்றிருக்க வேணுமேயல்லது பீருணு என்றிருக்கத் தகாதேயென்று சோத்யம் வருமென்று கருதி "லிங்கவ்யத்யயம் ஆர்ஷம்" என்றருளிச் செய்தார் மாமுனிகள். லிங்கவ்யத்யயம் கொள்ளாமலும் (பும்லிங்கமாகவே வைத்தும்) நிர்வஹிக்கலாம் என்பதை யோஜநாந்தரமாகக் காட்டினர். மேலே ப்ரஸ்தாவிக்கப்பட்ட திருப்புட்குழி ஸ்வாமி இதைக் கண்டு மருண்டு ஒருநாள் தமது ப்ரவசன கோஷ்டியில் இவ்விடத்தைப் பிரஸ்தாவித்து "பீருணு பீர்வா" என்று இரண்டு ரூபமும் உண்டாகையாலே இங்கு ஆர்ஷவ்யத்யய மென்பதற்கு ப்ரஸக்தியே கிடையாது; மணவாளமாமுனி ஏதோ மருண்டு எழுதிவிட்டார். சப்த மஞ்ஜரியில் (கர்த்ருணு, கர்த்ரா) என்று நீங்கள் வாசித்ததில்லையா? *பாஷித பும்ஸ்கம் பும்வத் காலவஸ்ய* என்று வியாகரணனுசாஸன முள்ளது—என்று பலவும் பொழிந்துவிட்டார். யார்? மஹாமஹோபாத்யாய திருப்புட்குழி ஸ்வாமி. அந்த ப்ரவசன கோஷ்டியில் இருந்த ஸ்ரீவரவரமுநி பக்தரான ஒரு ஸ்வாமி இதைக் கேட்டிருந்து அங்கு வடவண்டை மாடவீதியி லெழுந்தருளியிருந்த (கீர்த்தி மூர்த்தியான) கோயில் கந்தாடை அண்ணன் ஜடப்ரோல். சப்தகுணேத்தீபம். ரங்காசாரியர் ஸ்வாமியிடம் இந்த தூஷணத்தை ப்ரஸ்தாவித்தார்; அந்தஸ்வாமி மஹாபாஷ்யாந்த ப்ரசண்ட பண்டிதர். அவரிடத்தில்தான் திருப்புட்குழி ஸ்வாமி வியாகரண மதிகரித்தாராம். மேற்சொன்ன ப்ரஸ்தாவத்தைக் கேட்டருளின அந்த ஸ்வாமி திருப்புட்குழியப்பாவை வரவழைத்து "அப்பா! பாம்புபுற்றிலே கைவைக்காதே, வாய் வைக்காதே" என்றாராம். 'அடியேனுக்குப் புரியவில்லையே, என்ன விவக்ஷை?' என்று சொல்லிக்கொண்டே *பாஷிதபும்ஸ்கம் பும்வத் காலவஸ்ய* என்று வாயெடுத்தாராம்; உடனே "உனக்கு நான் வியாகரணஞ் சொல்லிப் பாழாய்ப் போனேன்" என்று ஸாதித்து 'அந்த அநுசாஸனத்தில் பும்லிங்க நபும்ஸகலிங்கமிரண்டொழிய ஸ்த்ரீலிங்க சப்தத்திற்கு ஏதேனும் ப்ரஸக்தியுண்டோ? ஏனிப்படி அஸ்தாநே மருண்டாய்? மணவாள மாமுனிகள் ஸந்நிதியிலே போய் தண்டன் ஸமர்ப்பித்து விட்டு வா" என்று ஸாதிக்க, அப்படியேசென்று ஸேவித்துவந்தாராம். ப்ரக்ருத பண்டிதரும் பாம்பு புற்றில் கைவைக்க விழிந்தார். ... ... .... விசதவாக் சிகாமணிகளின் வாக்வைசத்யம் என்று தொடங்கினதை நாம் இவ்வளவோடு தலைக்கட்டி, மேலே பாதுகா பத்ரிகையில் ப்ரக்ருத பண்டிதர் ப்ரஸங்கித்துள்ள மற்றுஞ்சில விஷயங்களையும் விமர்சிக்கப் புகுகிறோம். ... .. ... *

## இடையில் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன ஸமீக்ஷா

30—12—70ல் இதை நாமெழுதிக்கொண்டிருக்குந் தருணத்தில் ஸ்ரீமதுபயவே புத்தூர் அட்வகேட் ஸ்வாமியின் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகையின் 277 லக்கமுள்ள ஸஞ்சிகை கிடைத்ததனல் அதில் மிக விரிவாக வெளிவந்துள்ள ஷண்மத ஸ்தாபன சர்ச்சை யென்னும் வியாஸம் அறுபது பக்கம் கொண்டதாய்ப் பத்ராதிப ஸ்வாமியால் எழுதப் பட்டு வெளிவந்ததை ஒரே மூச்சில் வாசித்து முடித்தோம். இவ் விஷயம் ஒரு பெரிய வாதப்போராக நிகழ்ந்து வருகிறது. ப்ரஹ்மஸ்ரீ. வரஹூர் சாஸ்திரிகளுக்கும் அட்வகேட் ஸ்வாமிக்கும் லிகித மூலமான வாத சர்ச்சை நடந்துவருகிறது. வினுக்கள் கொடுத்து விடைபெறும் வகையையும், பெற்ற விடைகளின்மேல் ருஜுவான வழியில் மேன் மேலும் வினுக்கள் தொடுக்கு மழகையுங்கண்டு உள்ளம் பூரித்தோம். வாத சர்ச்சையில் இறங்கும் பண்டிதர்கள் அந்த வழியைப் பின்செல்வது நன்று என்று ப்ராஸங்கிகமாக விஜ்ஞாபித்து, விசதவாக்சிகாமணி வாக்வைசத்யமென்னுங் கட்டுரையைத் தலைக்கட்டினேமானேம். ... *

### 2. இனி, பண்டிதரின் பல வாதங்களை விமர்சிக்கிறேம்.

ப்ரக்ருத பாதுகாபத்ரிகையில் ப்ரக்ருத பண்டிதருடைய கட்டுரையின் முடிவில் (பக்கம் 16ல்) 8 வேதங்களின் அபௌருஷேயத்வம் என மகுடமிட்டு முக்கால் பக்கம் எழுதப்பட்டிருப்பதானது நம்முடைய தனிப்பட்டவொரு வியாஸத்தைப்பற்றித் தோன்றியுள்ளது. நம்முடைய ஸ்ரீராமாநுஜன் 260, 26 என்று இரண்டுலக்கமுள்ள ஸஞ்சிகையானது மணவாளமாமுனிகளின் அறுநூருண்டுநிறைவுநினைவு மலர்களுள் ஒன்ருன அரிய பெரிய அறுநூறு விருந்து என்னும் மலரின் முதற்பகுதியாகும் அதில் 70, 71, 72 பக்கங்களில் ஐந்து வியாஸங்களினுல் வேதத்தின் பெருமையை விளக்கியிருக்கிறேம். அதில் 134. "வேதங்களின் அபௌருஷேயத்வம், 135. வேத ப்ரகாசிகவின் அற்புதத்தன்மை" என்னுமிரண்டு வியாஸங்களைப் பற்றி ப்ரக்ருத பண்டிதர் சித்தவிகாரங்கொண்டு எழுதியுள்ளார். குறிப்பிட்ட ஸ்ரீராமாநுஜனில் நாம் எழுதியிருப்பதை ஈண்டு அநுவதித்து உண்மையான வைதிகர்களுக்கு உயர்ந்த விருந்தாக அளிக்கிறேம். —வேதங்களின் அபௌருஷேயத்வம்— 134. உலகத்தில் கோடிக் கணக்கான வாங்மயங்கள் தோன்றியிருக்கின் றன. 'இதை இன்னுரியற்றினுர், இதை இன்னுர் செய்தார்' என்று ஒவ்வொரு நூலுக்கும் கர்த்தாக்கள் நிர்தேசிக்கப் பட்டுள்ளார்கள்; அப்படி வேதத்திற்கு ஒரு கர்த்தாவை யாரும் எந்நாளிலும் நிர்தேசித்ததில்லை. சிறு சிறு நூல்களுக்கெல்லாம்

கர்த்தாக்கள் தெரிய வரும்போது அளவு கடந்த நூலாகிய வேதங்களுக்குக் கர்த்தா உண்மையாக வொருவரிருந்தால் அவரைச் சொல்லாமலிருப்பார்களா? வேதாந்த வாசிரியர் «ப்ரவக்தர ச்சந்தஸாம், வக்தா பஞ்சராத்ரஸ்ய யஸ்ஸ்வயம்» என்றருளி யிருப்பது ப்ரஸித்தம். பஞ்சராத்ரத்திற்கு ஸ்வயம் வக்தா வென்றும் வேதங்களுக்கு ப்ரவசநகர்த்தா என்றும் இதில் சொல்லிற்று. இதனால் ஸர்வேச்வரனும் வேதங்களுக்குக் கர்த்தாவல்லன் என்று விளங்கிற்று; வைதிகர்களுங்கூட இதைப் பற்றி சங்காகளங்கம் வஹித்திருக்கக் கூடும் (அதாவது) எந்த சப்தராசியும் ஒரு கர்த்தாவோ வக்தாவோ இல்லாமல் ஆவிர்ப்பவிக்க இயலாதாகையால் விஸ்தாரமான இதிஹாஸ புராணாதிகளை யெழுதிவைத்த மஹர்ஷிகள் தாமே வேதங்களையும் எழுதிவைத்திருப்பார்கள் என்று.....நானுங்கூட இளமையில் இங்ஙனே எண்ணி யிருந்ததுண்டு; நான் தெளிந்த விதத்தை இங்கு விவரிக்கிறேன். வேதங்கள் ஒரு நூறு வருஷங்களுக்கு உட்பட்டகாலத்தில் அச்சேறி வருகின்றனவேயன்றி அதற்கு முன் இவற்றை ஏட்டிலெழுதிவைத்தவர்களுங்கூடக் கிடையாது "ஓலைப்படா ப்ரமாணம்" என்றே பூருவர்களால் வழங்கப்பெற்றுள்ளது. வேதத்திற்கு ஸ்வரம் முக்கியமானது. அந்த ஸ்வர ஸந்நிவேசம் வெகு ஆச்சர்யமாக அமைந்திருக்கின்றது; அந்த ஆச்சரியத்தை வேதமோதினவர்களுங்கூட ஆழ்ந்து அறிந்திலர் என்றும்சொல்லலாம். கேண்மின். —வேதசப்தராசிகளின் அற்புதத்தன்மை— 185, வேதத்தில் பல லக்ஷக்கணக்கான பதங்கள் வருகின்றன; அவற்றுக்கு அமைந்திருக்கும் ஸ்வரங்கள் நியதங்களாய் ஓரிடத்திலும் பிறழாமலும் ஒரே பதத்திற்கு [ஸுபந்தமோ திஙந்தமோ எதுவானாலும்] அர்த்த பேதத்தாலும் நிமித்த பேதத்தாலும் அமைந்த ஸ்வரபேதமும் ஓரிடத்திலும் பிறழாமலும் பூமண்டலம் முழுவதும் ஸமரூபமாக ஓதப்பட்டு வருவதை நோக்கினால் இது ஒரு புருஷனுடைய க்ருதிக்கு விஷயமாகக் கூடியதன்று என்பது ஸ்பஷ்டமாக விளங்கும். ஆகாசவாணியென்று ஒன்று சொல்லுவதுண்டே; அதேபோல வேத ராசிகளும் ஆகாசத்திலே தோன்றிப் பரமபுருஷனால் க்ரஹிக்கப்பட்டிருக்கவேணுமே யல்லது பரமபுருஷனுக்குங் கூட இந்த சப்த ஸந்தர்ப்ப ஸங்கலனம் ஸாத்யமன்று என்று துணிந்து கூறுவேன். மானிடர்க்கு ஸஹஜமான இருள் துயக்கு மயக்கு மறப்பு முதலான எவ்வகைக் குற்றமுமற்று விளங்காநின்ற வேதங்கள் அனந்தங்களென்பது காடகச்ருதியிலுள்ள பரத்வாஜோபாக்கியானத்தினால் நன்கு விளங்கும்.

இவ்வளவும் நாம் ஸ்ரீராமாநுஜன் 260-ல்
ஆறு மாதங்களுக்கு முன்பு வெளியிட்டிருந்தது.

இதைப்பற்றி ப்ரக்ருத பண்டிதர் என்ன எழுதியிருக்கிறார் தெரியுமோ? அவர் எழுதியிருப்பதாவது—

"நூறு வருஷங்களுக்கு முன் ஏட்டில் எழுதிவைத்தவர்கள் கூட இல்லாமையாலும் ஸ்வரம் முக்கியமாயிருப்பதாலும் வேதம் அபௌருஷேயம் என்று இவர்கள் தெளிந்தார்கள்; இப்போது மற்றவர்களையும் தெளியவைக்கிறார்கள். எப்படியிருக்கிறது அபௌருஷேயத்வ ஸ்தாபனம்! ஓரேநிமிஷத்தில் தெளிவு உண்டாகிவிடுகிறது"

என்று ஏசும் முறையில் எழுதியுள்ளார். நம்முடைய கட்டுரையில் "ஸ்வரம் முக்கியமாயிருப்பதால் வேதம் அபௌருஷேயம்' என்று நாமெழுதியிருக்கவில்லை. எவ்விதமாக எழுதியிருக்கிறோ மென்பதை மேலே நாம் அநுவதித்திருப்பதி லிருந்து அறியலாம்.

(சென்னை) மேல மாம்பலத்திலுள்ள சங்கர மடத்தில் விளங்கும் வேத பாராயண ஸபைக்கு நேற்று 27—12—70 ஞாயிறன்று பத்தாவது ஆண்டு நிறைவு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதன் சார்பாக ஒரு மலரை அந்த ஸபையார் வெளியிட்டார்கள். அவர்கள் நம்மிடம் வேதவிஷயமாக ஒரு கட்டுரை எழுதித் தரவேணுமென விரும்ப "வேதஸ்வரங்களில் சில ஆராய்ச்சிகள்" என மகுட மிட்ட கட்டுரையொன்றை எழுதித் தந்தோம், அதை லக்ஷணாந்தமும் வர்ண க்ரமாந்தமும் ஓதின கனபாடிகள் பன்னிருவர் வாசித்துப்பார்த்து 'இவை அபூர்வ மான ஆராய்ச்சிகள்' என்று மனமார உவந்தார்கள். அக்கட்டுரை அந்த வேத ஸபையின் மலரில் அச்சிடப்பட்டு 27—12—70ல் ஆயிரவர் கூடின குழுவில் அந்த சங்கர மடத்திலேயே வேத பாராயண ஸபையினரால் அரங்கேற்றப்பட்டது.

அந்த வியாஸம் உலகங்காண இங்கும் பிரசுரிக்கப்படுகிறது காணீர்;—

**வேதஸ்வரங்களில் சில ஆராய்ச்சிகள்**
**26—12—70ல் P. B. A. எழுதியது**

வேதத்தில் லக்ஷக்கணக்கான பதங்கள் ஓதப்பட்டு வருகின்றன. இவற்றின் ஸ்வர ஸந்நிவேசம் ஒரே விதமாக இல்லை. ஒரே பதமானது ஸ்தல பேதத்தினால் வெவ்வேறு விதமான ஸ்வரத்தோடு கூடியதாக ஓதப்படா நின்றது. இந்த ஸ்வர பேதம் எல்லாப் பதங்களிலுமில்லை; அனேக பதங்களில் காண்கிறோம். இத்தகைய பேதம் எதனால்? என்று விமர்சிக்க வேணும் இங்குச் சிலர் கருதுவதென்னவென் றால், ஸ்வதந்த்ரமான வேதத்தில் இதைப் பற்றி விமர்சனம் செய்வதற்கு நமக் கென்ன அதிகாரம்? ஸ்வதந்திரனான வேத புருஷன் தன்னிஷ்டப்படி ஸ்வரங்களை அமைத்திருக்க, அதற்குக் காரண விமர்சம் செய்ய முடியாது என்று; இத்தகைய கருத்துக் கொண்டவர்கள் சிலர் மட்டுமல்ல; பெரும்பான்மையானவர்கள் என்ன லாம். இக்கருத்து யுக்தமல்ல. இங்கு நம்முடைய விமர்சத்தை வைதிக வித்வான் களின் முன்னிலையில் ஸமர்ப்பிக்கிறோம். அவர்கள் குண தோஷங்களை விமர்சிக்கக் கடவர்கள்.

தைத்திரீய ஸம்ஹிதையில் முதல் அநுவாகத்தை யெடுத்துக் கொள்வோம். அதாவது * இஷே த்வோர்ஜே த்வா * என்கிற அநுவாகம். நாற்பத்துமூன்று பதங்கள் கொண்ட இவ்வநுவாகத்தில் ஓரெழுத்துப் பதங்கள் பதினொன்றும், ஈரெழுத்துப் பதங்கள் பன்னிரண்டும், மூவெழுத்துப் பதங்கள் பத்தும், நாலெழுத்

துப் பதங்கள் எட்டும், ஐயெழுத்துப் பதங்கள் இரண்டுமாக (48) பதங்கள் உள்ளன. இப் பதங்களின் ஸ்வரத்தில் நம்முடைய விமர்சம் கேளீர். இவற்றில், த்வா, வஃ, ஆ, ப்ர என்கிற ஓரெழுத்துப் பதங்கள் எங்கும் நியமேந ஏகஸ்வரயுக்தங்களே யொழிய ஓரிடத்திலும் இதர ஸ்வரம் கிடையாது. ஆகவே இப்பதங்களில் விமர்சம் அநபேக்ஷிதம், *ஸ த்வா அத்வர்யுஸ் ஸ்யாத்* என்ற விடத்தில் த்வா என்பது அநுதாத்தமாக இல்லையேயென்று வைதிகர்கள் நினைக்கமாட்டார்கள். அங்கு து வை என்கிற இரண்டு பதங்கள் சேர்ந்திருப்பதனாலே பதசரீரம் த்வா என்பதல்ல என்று தெளிவது. மா என்கிற பதம் பல இடங்களில் அநுதாத்தமாயும் பல இடங்களில் உதாத்தமாயுமிருக்கும். இந்த பேதத்திற்கு நியதமான காரணமுண்டு. என்னை யென்கிற பொருளில் வரும் மா என்பது நியமேந அநுதாத்தம். நிஷேதார்த்தத்தில் வரும் மா என்பது நியமேந உதாத்தம். *பாஹி மா மா மா ஹிம்ஸீஃ* என்னுமிடத்தை யெடுத்துக் கொள்வோம். இங்கே (மா) என்கிற பதம் அடுத்தாப்போல் மூன்று விசையுள்ளது. ஓரிடத்தில் மட்டும் உதாத்தம்; இரண்டிடத்தில் அநுதாத்தம். மா பாஹி—என்னை ரக்ஷிக்கக் கடவாய்; மா மா ஹிம்ஸீஃ - என்னை வருந்தச் செய்யாதே. என்று பொருளாதலால் ஸ்வர பேதம் காரணத்தோடு கூடியதென்று தெரிந்து கொள்ளலாம். மா சந்தஃ என்ற விடத்திலுள்ள மா என்கிற பதம் நிஷேதார்த்தகமன்று; ஒரு ச்சந்தோ விசேஷ வாசகம்.

(ஸ்த) என்கிற பதத்தைப்பற்றி விளக்கம் கேண்மின். இது திஙந்தபதம். திஙந்த பதங்களுக்கு அநுதாத்தஸ்வரம் ஔத்ஸர்க்கிகம்; அது உதாத்தமாவதற்கு யோஹி ப்ராப்தி முதலான காரண விசேஷங்களுண்டு; "யே தேவா திவ்யேகாதச ஸ்த. ஆபோஹிஷ்டா மயோபுவஃ" என்பன போன்ற இடங்களில் யச்சப்தமும் ஹி என்பதும் இருப்பதினாலேயே ஸ்த என்பது உதாத்த ஸ்வரமடைந்துள்ளது, ப்ரக்ருதத்தில் *வாயவஸ்ஸ்தோபாயவஸ்ஸ்த* என்னுமிடத்தில் யோஹிப்ராப்தியில்லாமையினால் திஙந்த பதங்களுக்கு ஔத்ஸர்க்கிகமான அநுதாத்தஸ்வரம் மாறுபடாமலிருக்கின்றது.

திஙந்தபதங்களைப் பற்றியே மிக விரிவாகத் தெரிவித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்த இஷேத்வாநுவாகத்தில் மற்றும் சில திஙந்தபதங்கள் உள்ளன; ஸ்யாத, பாஹி, ப்யாயத்வம், ஈசத, வ்ருணக்து, அர்ப்பயது - இந்த திஙந்தங்களெல்லாம் ஔத்ஸர்க்கிகமான அநுதாத்த ஸ்வரங்கொண்டேயிருப்பது காணலாம். யோஹிப்ராப்தியாகிற நிமித்த விசேஷமிருந்தால் இவற்றில் உதாத்தஸ்வரயோகம் தவறாமல் நேர்ந்தே தீரும். ஸ்யாத் என்கிற திஙந்தபதம் அநுதாத்தமாகப் பலவிடங்களிலும், உதாத்தமாகப் பலவிடங்களிலும் வருவதைக் கண்டிருக்கிறோம். அநுதாத்தமாக வருமிடங்களில் காரண விசாரம் வேண்டியதில்லை. உதாத்தமாக வந்தால் நாம் கீழே விவரித்த காரண விசேஷம் இருந்தே தீரும். பாஹி என்கிற திஙந்தபதம் ஸர்வாநுதாத்தமாயும் அந்தோதாத்தமாயும் பல விடங்களில் வரும். ப்ரக்ருதத்தில் (பசூந் பாஹி) என்னுமிடத்தில் ஸர்வாநுதாத்தம். இது நிர்விசாரம்; (பாஹி யஜ்ஞம், பாஹி யஜ்ஞபதிம், பாஹி மாம் யஜ்ஞநியம்) என்பன போன்ற விடங்களில் அந்தோதாத்தமாயிருப்பதற்கு என்ன நிமித்தமென்னில், அது முக்கிய

மாகத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம். கேண்மின்; வாக்யாதியிலும் பாதாதி யிலும் எந்த பதமும் ஸர்வாநுதாத்தமாக வராது என்பது நியதம். இந்த நியமத்தை எவ்வளவும் பரிசீலித்துப் பார்க்கலாம். பாஹி யஜ்ஞம், பாஹி யஜ்ஞபதிம், பாஹி மாம் யஜ்ஞநியம் என்ற விடம் மூன்று வாக்யங்கள் இங்கு பாஹி என்பது வாக்யாதி யிலேயுள்ளது; ஆகவேதான் உதாத்த ஸ்வர யோகமாயிற்று. அதுவே, யஜ்ஞம் பாஹி, யஜ்ஞபதிம் பாஹி, யஜ்ஞநியம் மாம் பாஹி என்றிருக்குமாளுல் பாஹி யென்பது ஸர்வாநுதாத்தமாகவே யிருக்கும். அதற்கு உதாஹரணம் (பசூந் பாஹி) என்கிற ப்ரக்ருத ஸ்தலமே போதும். திஙந்த பதங்களில் 1, 2, 3 உபஸர்க்கங்கள் சேர்ந்து ஸமாஸமாகியுள்ள விடங்களில் காணும் ஸ்வர பேதங்களைப் பற்றி விரிவாக எழுதவேண்டியதுண்டு; அது நாமெழுதிய வேதலக்ஷண க்ரந்தங்கள் பலவற்றில் விரிவாகக் காணத்தக்கது. நாம் செய்த விமர்சங்களில் அதுவே முக்கியமானது.

இப்போது நாம் எடுத்துக் கொண்ட இஷேத்வாநுவாகத்தில் உள்ள இரண் டெழுத்துப் பதங்களில் இஷே ஊர்ஜே, ஸ்தேநঃ. ஹேதிঃ. பரி, பஹ்வீঃ, த்ருவாঃ, பசூந் - என்னும் பதங்கள் எங்கும் இதே ஸ்வரமாகத்தான் வரும். ஸ்வரம் மாருது. தேவঃ என்கிற பதத்தைப் பற்றி மட்டும் சிறிது தெரிவிக்கிறேன். இப்பதம் எங்கு வந்தாலும் அந்தோதாத்தமாகவே வரும். வேறு விதமாக வராது. காடகத்தில் *ச்ரத்தயாதேவோ தேவத்வ மச்நுதே* என்றவிடத்தில் தேவঃ என்பது ஸர்வாநு தாத்தம்போல் தோன்றும். அப்படியல்ல. அங்கு அதேவঃ என்றே பதவிபாகம்; உதாத்த ஸ்வரித ப்ரசயங்கள் கொண்ட பதமிது. இந்த பதம் ஸம்புத்தியாக வருமிடங்களில் ஸர்வாநுதாத்தமாக வரும். அதுவே வாக்யாதியில் வருமாகில் அந்தஸ்வரிதமாக வரும். நிமித்த விசேஷமில்லாமல் ஸ்வரம் பேதியாது.

அக்நியাঃ என்கிற பதத்தைப் பற்றி என்னுடைய விமர்சத்தைக் கேண்மின். இது ஸுபந்த பதம். மூன்றெழுத்துள்ள ஸுபந்த பதம் ஸர்வாநுதாத்தமாக எங் கும் வாராது. ஸம்புத்தியாக இருந்தால் மட்டும் வரும். இங்கு இது ஸம்புத்தியாக வுள்ளது. *ஏதாநி தே அக்நியே நாமாநி* என்ற விடத்தில் (ஏகவசனத்தில்) ஸர்வாநுதாத்தமாக வந்திருக்கிறது. ஆகவே இங்கு பஹுவசநாந்தமென்று திண்ணமாக எண்ண வேண்டியது. ஆனதுபற்றியே விஸர்க்காந்தமாகவுமுள்ளது. இங்கு விஸர்க்க முண்டா இல்லையா என்று ஸந்தேஹமுண்டானுல் இது ஸர்வாநு தாத்தமாயிருப்பது கொண்டே விஸர்க்கமிருந்தே தீர வேணுமென்று நிச்சயிக்கலாம். விஸர்க்கமில்லையாகில் இதற்கு ஸர்வாநுதாத்தத்வம் அஸம்பாவிதமேயாகும்.

இந்த அநுவாகத்தில் ச்சாந்தஸவ்யத்யய முண்டா என்று பார்க்குமளவில் ஊர்ஜஸ்வதீঃ, பயஸ்வதீঃ, ப்ரஜாவதீঃ, பஹ்வீঃ, என்கிற பதங்கள் பொருள்வகை யில் ப்ரதமா பஹுவசநாந்தங்கள்; ஆதலால் ஊர்ஜஸ்வத்யঃ, பயஸ்வத்யঃ, ப்ரஜா வத்யঃ, பஹ்வ்யঃ, என்றிருக்கவேண்டும் அப்படி யில்லாமை ச்சாந்தஸ வ்யத்யய மாகும் பஹ்வீঃ என்கிற பதத்தைப் பற்றித் தனிப்பட விசாரித்திருக்கிரும், இத் தகைய வ்யத்யயம் வேதத்தில் அடிக்கடி வரும். அது வேறு விஷயம். எந்த வ்யத்யயமும் ஸம்ஹிதையிலுண்டே யல்லது பதபாடத்தில் கிடையாது. விஸ்தர பியா விரம்யதே. ... ... ... ... *

வித்வத் வைதிக ஸார்வபௌமர்களை நோக்கி விஜ்ஞாபிக்கிறேன்; பவபூதி சொன்னார்— *யே நாம கேசிதிஹ நஃ ப்ரதயந்த்யவஜ்ஞாம் ஜாநந்தி தே கிமபி தாந்ப்ரதி நைஷ யத்நஃ, உத்பத்ஸ்யதே மம து கோபி ஸமாநதர்மா காலோஹ்யயம் நிரவதிர் விபுலா ச ப்ருத்வீ* என்று. அதை நினைவூட்டிக்கொண்டு விஜ்ஞாபயே. வேதத்தில் லக்ஷக்கணக்காகவுள்ள பதங்களின் ஸ்வரப்ரக்ரியையை ஆராய்ச்சி செய்து உண்மை கண்டுபிடித்தவன் ஜம்பூத்வீபத்தில் அடியேனொருவன் தவிர வேறொருவருமில்லையென்று துணிந்து சொல்லுவேன். இது செருக்குமொழி யாயினுமாகுக. திருமழிசைப்பிரான் தமது திருவந்தாதியில் "ஞாலத் தொரு பொருளை வானவர்தம் மெய்ப்பொருளை, அப்பி லருபொருளை யானறிந்தவாறு— ஆரறிவார் 'என்று மூன்றும்பாட்டில்மொழிந்ததுபோல நிர்ப்பயனாய்நின்றுமொழிகின் றேன். திருவையாற்றுக் கல்லூரியில் நெடுநாள் வாழ்ந்தவரும் வியாகரணத்தோடு வேதத்தையும் பூர்த்தியாகஓதினவரும்,காஞ்சீபுரியில்வந்து வஸித்து ஐந்தாறுமாதங் களுக்கு முன்பு பரமபத மெய்தினவருமான வேளியநல்லூர் ஸ்ரீநிவாஸதாதாசாரிய ரென்பவர் வேதாத்யயந ஸர்வஸ்வாதிகள் மூலமாக நாம் வெளியிட்டிருந்த விமர்சங் களைக்கண்டு என்ன எழுதியிருந்தார் தெரியுமோ? அவர் மறைந்தாலும் அவர் அச்சிட்டிருப்பது மறையாது; "ஸூர்ய சந்திரர்கள் உதித்த நாள்முதல் இதுகாறும் ஒரு வைதிகருடைய புத்திக்கும் எட்டாத விஷயங்களை அண்ணங்கராசாரியருடைய நூல்களில் காண்கிறோம்" என்றெழுதியுள்ளார். மறைந்துபோன அவர் இருக் கட்டும். இப்போது சென்னையில் விளங்கும் ப்ரஹ்மஸ்ரீ காலடி ஸுப்ரஹ்மண்ய கனபாடிகளும் ப்ரஹ்மஸ்ரீ காசீ கனபாடிகளும் அந்த வேளிய நல்லூர் ஸ்வாமிக்கும் மேலாகச் சொல்லிக் கொண்டிருப்பதை சென்னை மாநகரிலுள்ளார் நேரில் கேட்டு உணரலாம். கேட்டு உணர்ந்தேயாகவேண்டும்.

வேதத்தை அடியேன் இருபத்திரண்டாவது வயதில் ஓத ஆரம்பித்தேன். காலமல்லாத காலத்தில் ஓதத் தொடங்கின படியால் ஸ்வரபேதங்கள் பிடிபடாமல் மிகமிக க்லேசமடைந்தேன். அப்போது இரண்டு (வேத) பாஷ்யங்களையும் பரிசீ லிக்கத் தொடங்கினேன். ஸ்வரபேத நிமித்தங்களை பாஷ்யகாரர்களுங்கூட பல விடங்களில் உட்புகுந்தறியவில்லை யென்று தோன்றிற்று. அதையெல்லாம் எனது வேதலக்ஷண நூல்களில் (வேதபாஷ்ய பரிசீலனாதிகளில்) விளக்கியே யிருக்கிறேன், அது கிடக்கட்டும் பதபாடபரித்ராணம், பதபாட பரிசுத்தி முதலான எனது நூல் களில் ஸ்வரஸந்நிவேசத்தின் அற்புதத் தன்மையை வைதிகவுலகம் வியக்க விளக்கி யிருக்கிறேன். ஸம்ஸ்க்ருதத்தில் இரண்டே பக்கம் சில வாக்யங்களை யெழுதி யச்சிட்டு அரசாங்கத்தார் "இதை உலகிலுள்ளார் யாவரும் ஸமஸ்வரமாக ஓத வேணுமென்று கட்டளையிட்டால் ஓர் ஊரிலாவது இந்தக் கட்டளை நிறைவேறுமா? என்று எனது நூல்களில் பலகால்கேட்டிருக்கிறேன். ஸ்வரவைசித்திரியைக்கொண்டு தான் நான் வேதத்தை அபௌருஷேயமென்று அறுதியிட்டேன். விவேகிகளான வைதிகர்கள் யாவரும் இதை ஆனந்தம் பொங்க இசைந்தேயுள்ளார்கள். வேத வாஸனையே யறியாதார் ஏசுவதனால் காஹாநிஃ? ''' '''' *

**ஸ்ரீராமாநுஜன் 260ல் நாம் எழுதியிருப்பவற்றை ஈண்டு அநுவதிக்கிறேன் அவற்றுக்கெல்லாம் விடை வெளிவந்ததா என்று பார்க்க.**

"அச்சுப்பிழைகளைப்பற்றி நான் அறிவிக்கமாட்டேன்—151. பதிப்புகளில் அச்சுப் பிழைகள் நேர்ந்து விடுவது அநிவார்யம். ஆனால் அப்பிழைகள் அளவுமீறி ஸம்ப விக்கப் பார்ப்பது அழகியதாகுமா? விஷய விந்யாஸங்களிலும் விசேஷித்து அவதானம் வேண்டும். இக்காலத்தில் பத்திரிகை வாசிப்பவர்கள் நாளுக்குநாள் அதிகப்பட்டு வருகிறார்கள். பெண்மணிகளுங்கூட உபயோகமடைந்து வருகிறார் கள். அவர்கள் குறைகூற வொண்ணாதபடி யிருக்கவேண்டும். இப்போது அடி யேன் இவ்விஷயத்தில் லேகினியைச் செலுத்த எழுந்தபடியால் கண்ணில்பட்ட விஷயங்களினால் நெஞ்சில் தோன்றின குறைகளை விநயத்துடன் விஜ்ஞாபிக்கி றேன். இவற்றைக் கடாக்ஷித்தருளி ஆண்டவன் திருவுள்ளம் உகக்குமேயன்றி வெறுப்படையாது. சீற்ற முருது. அமுதனார் "இன்றவன் வந்திருப்பிடம் என்ற னிதயத்துள்ளே தனக்கின்புறவே" என்றருளிச்செய்த கட்டளையில் ஸ்ரீமதாண்டவ னுக்கு என்னிதயத்துள்ளே தனியிருப்பிடமொன்று உண்டென்பதை "நானுமவனு மறிதும்" என்ற ஆண்டாள் ஸ்ரீஸூக்தியின்படியே அவருள்ளமும் என்னுள்ள முமேயறியும். ஆழ்வானை பட்டராக மருண்டது — ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரார்த்த ஸங்க்ரஹம் என்பது முன் தொடர்ச்சியாக அச்சாகி வருகிறது; இதில் (பக்கம் 5) "ஆயினும் நித்ய வஸ்துக்களுக்கு ஈச்வரன் எப்படிக் காரணமாவான் என்றால்" என்று தொடங்கும் வாக்யச்ரேணியில் "ப்ரமாணங்களினாலேயே அறியப்படு கின்றது" என்றெழுதிவிட்டு, இதற்கு ஸம்வாதமாக பட்டர் ஏதோ ஸாதித்திருப்ப தாய் வரையப்பட்டுள்ளது ஸ்வாமியின் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரதாந ப்ரதிதந்த்ராதிகாரத்தில் "இவ்வர்த்தத்தை *இச்சாத ஏவ தவ விச்வபதார்த்த ஸத்தா* என்ற சுலோகத்தாலே அபியுக்தர் விவேகித்தார்கள்" என்றுள்ளது. அதைத்தான் பாதுகை எழுதியுள்ளது. தேசிகன் எடுத்துக்காட்டின சுலோகம் கூரத்தாழ்வானுடையதே யன்றி பட்டருடையதன்று. இவ்விஷயத்தை பட்டர் ஸாதிதிருக்கவுமில்லை. *இச்சாத ஏவ* என்று ஸ்வாமி யுதாஹரித்த சுலோகம் மேலே ஸித்தோபாய சோதனாதிகாரத்திலும், மீண்டும் மூலமந்த்ராதிகாரத்திலும் உபாத்தமாகியுள்ளது. ஆக மூன்றிடங்களில் இரண்டிடத்தில் மட்டும் அபியுக்தர் அருளியதாகக் காட்டப்பட்டது. மூன்றாமிடத்தில் *"இச்சாத ஏவ தவ விச்வ பதார்த்த ஸத்தா* என்கிறபடியே" என்றுள்ளது பாதுகையிலும் (பெரியோர்கள்) என்று தேசிகோக்திச்சாயையிலே எழுதியிருக்கலாம். "பட்டர் என்றது தவறாகவே யிருக்கட்டும்; அப்படி யெழுதிவிட்டதனால் என்ன குடிகெட்டுப் போய்விட்டது" என்று ப்ரமாணசரணர்கள் க்ஷேபிக்க முயலார்கள். வைபரீத்ய மென்பது இன்னதில் இருக்கலாம், இன்னதில் இருக்கலாகாது" என்று யாரும் நியந்த்ரணம் செய்திருக்கவில்லையன்றோ? ஸ்ரீமதாண்டவன் இதைக் கடாக்ஷித்தருளியிருந்தால் திருத்தம் வெளியிட நியமித்தே யிருப்பர். பல ஜோலிகளிலீடுபட்டிருக்கு மாண்ட வனுக்கு இதையெல்லாம் ஊன்றிக் கடாக்ஷித்தருள அவகாசமிராதென்றே நினைக் கிறேன். இஃது ஒன்றேயன்று; மேலும் பல விஷயங்களை விவரிக்கிறேன்.

கீழே சில ஏடுகளைத் தள்ளிப் பார்த்ததில் "மாயக் கண்ணனும் உண்பதற்குப் பட்டபாடு" என மகுடமிட்ட ஒரு கட்டுரை காணப்பட்டது. அருளிச்செயல் மூலத்தையும் அர்த்தத்தையும் கொலை பண்ணுகிற கட்டுரையிது. கேவலம் பாண்டித்ய மேயன்றிக்கே பரமராஸிக்யமும் பொருந்திய ஸ்ரீமதாண்டவன் இதையெல்லாம் கடாக்ஷித்தருளி எப்படி ஸஹித்திருக்கிருரென்று தெரியவில்லை; *செந்நெலரிசி சிறுபருப்புச் செய்தவக்காரம் நறுநெய் பாலால் பன்னிரண்டு திருவோணமட்டேன் ......எல்லாம் விழுங்கிட்டுப்போந்து நின்ருன்* என்கிற பெரியாழ்வார் பாசுரம் ஈண்டு விவரிக்கப்படுகிறது; யசோதைப் பிராட்டியிடம் கண்ணனுடைய தீம்புகளைச் சொல்லி முறையிடுகின்ற ஓர் ஆய்ச்சியின் பாசுரம் இது. "நல்ல நெய்யை விட்டு அக்காரவடிசில் பண்ணிவைத்தேன்; சூடு ஆறிய பிறகு சாப்பிடவேணு மென்றிருந்தேன், அநியாயத்தைக் கேட்டாயா? உன் பிள்ளையிருக்கிருனே, இதை எப்படியோ தெரிந்துவைத்து ஒரு சொட்டுக்கூட பாத்திரத்தில் மிகுதியில்லாமல் யாவற்றையும் விழுங்கிவிட்டானம்மா! என் மனஸ்ஸு என்ன தபிக்கிறது தெரியுமா?" என்றெழுதப்பட்டுள்ளது. தானுண்பதற்காகச் சமைத்து வைத்திருந்ததாகவும் அதைக் கண்ணன் விழுங்கிப்போய்விட்டதாகவும் அதற்காகப் பரிதாபப் படுவதாகவும் சொல்லுகிற ஒரு ஆய்ச்சி திருவாய்ப்பாடியிலிருப்பளா?என்ருலோசிக்க வில்லையே, இங்கு உண்மைப்பொருள் யாதெனில்; திருவாய்ப்பாடியில் திருவோண விழாக் கொண்டாட்டமென்று ஒரு மஹோத்ஸவம் கோபிகளெல்லாரும் தங்கள் தங்களில்லத்திலே நடத்துவதுண்டு; அயோத்தியில் அவதரித்த இராமன் தான் ஸாக்ஷாத் நாராயணமூர்த்தியாயிருக்கச் செய்தேயும் *ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயண பூஜை பண்ணினது போலத் திருவாய்ப்பாடியில் கண்ணபிரானும் நாராயண பூஜை செய்வன். அந்த விஷயம் நிற்க. கோபிகள் செய்துபோருகிற திருவோண வழிபாட்டை இங்கு அறிந்து கொண்மின். திருவோணந்தோறும் செய்யவேண்டிய பூஜையை அப்போதப்போது செய்ய இயற்றியில்லாத வொரு கோபி பன்னிரண்டு திருவோணத்திற்காக ஒரு திருவோணம் அனுட்டிக்கமுயன்று பக்ஷ்யவர்க்கங்களைச் சமைத்து வைத்து ப்ராப்த ஸமயத்திலே திருவாராதனம் ஸமர்ப்பித்துக் கண்டருளப்பண்ண வேணுமென்றிருக்கையில் கண்ணபிரான் "ஸத்வாரகமாகக் கிடைக்கப்போகிற இந்த வழிபாடு நமக்கு அத்வாரகமாகவே கிடைக்கட்டுமே" என்று கருதித் தானே உட்கொண்டான். இதற்கு அந்த கோபி அந்தரங்கத: உகப்பவளே யொழிய வெறுப்பவள் அல்லள். பழிமொழிகளைக் கூறி முறையிடுதல் என்பது ஒரு வியாஜமாத்திரம் இந்த முறையீட்டை எவ்வளவோ அழகாக மரங்களுமிரங்கும் வகையிலே யெழுத வேண்டுமே. சூடு ஆறின பிறகு தான் வயிறு வளர்க்க வைத்திருந்ததாகவும், அதைக் கண்ணன் உண்டுவிட்டதற்காகப் பரிதபிப்பதாகவும் எழுதுவது அந்தோ! சுவைக்கேடுகளில் தலையானதல்லவா? ஆண்டவன் இதை ஏன் கடாக்ஷிக்கவில்லை?

யசோதைப் பிராட்டி கண்ணனைக் கடிந்து பேசச் செய்தேயும் "மண்மகள் கேள்வன் மலர் மங்கை நாயகன் நந்தன் பெற்றமதலை அண்ணல்" என்றும் "சேடன் திருமறுமார்பன்" என்றும் ச்ரிய:பதித்வத்தைச் சொல்லுவதை விடுவ

தில்லை. இவன் செய்யும் தீம்புகளைச்சொல்லுகிற கோபிகளும் "சாளக்கிராமமுடைய நம்பி சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்ருன் ' என்றன்றே சொல்லுகிருர்கள். இப்படிப்பட்ட இடங்களிலே அருளிச்செயல்களை நிர்வஹிப்பது அற்புதமான மேதையுள்ளவர்களுக்கே உரித்தாகும். "நான் தின்பதற்கு வைத்திருந்ததை இவன் தின்றுவிட்டான்" என்று பொடிகிற ஒரு கோபியைக் கற்பனை செய்வது அந்தோ? டரிதாபம். பாதுகைக் கட்டுரைகளில் அருளிச் செயல் மூலமுங்கூடக் கொலையுண்டு கிடப்பதாக வெழுதினேம். அந்த சித்ரவதத்தைச் சிறிது கேளீர். "மாயக் கண்ணனுண்பதற்குப் பட்டபாடு' தொடங்கும்போதே "தாமோருருட்டித் தயிர் நெய் விழுங்கிட்டு" என்கிற பெரிய திருமொழிப் பாசுரம் கையாளப்படுகிறது; இதன் ஈற்றடி "தாமோதரா கொட்டாய் சப்பாணி தாமரைக் கண்ணனே சப்பாணி என்றுதான் ஆழ்வாரருளியது. 'தாமரைக் கண்ணனே கொட்டாய்' என்று இக் கட்டுரைகாரர் கொட்டுகிருர். கொட்டாய்சப்பாணியை கொட்டாய்ச் சப்பாணி யென்று கர்ணருந்துதமாக்கி வைத்திருப்பது அவலக்ஷணம். "அப்பொழுதுத்தான் பாலைக் கறந்து" என்று இவர் தமது ஸொந்த வாக்யத்தை எவ்வளவு அலங்கோலமாகவும் எழுதலாம். அருளிச் செயலையா கர்ணகடோரமாக்குவது!

பொய்கைப்பிரான் பரிவு என மகுடமிட்டு அவருடைய பாசுரமொன்று விரஸமாக விவரிக்கப்படுகிறது. *கொண்டாளையல்லாலென்கிற பாசுரத்தின் இரண்டாமடியில் "மண்தாவென விரந்து மாவலியை" என்றுள்ளதை இரந்த மாவலியாக்கி மஹாபலிதான் யாசகம் செய்ததாகக் காட்டியுள்ளது. அதற்கு முன் பக்கத்திலே *மனத்திலோர் தூய்மையில்லை* என்கிற திருமாலைப் பாசுரத்தை முழுது மெழுதி "சினத்தினுல் செற்றம் நோக்கித் தீவிளி விளிவன்" என்கிற இரண்டாமடியை 'தீவினை விளிவுன்' என்று கொலைபண்ணியுள்ளது பெருமாள் திருமொழி ஸேவிக்கு மொருவர் "அன்னனைய பொற்குவடாம் அனந்தபத்மநாபேனே" என்ருராம். அப்படிப்பட்ட விபர்யாஸங்களுக்கு ஆனந்திப்போம்; தீவினைக்கும் விளிவுனுக்கும் எங்கே போயழுவது! அடியேன் உத்தேசித்த அரிய பெரிய விருந்துகளில் இப்படிப்பட்ட விருந்துகளா வந்து புகவேணும்? ஒருகால் அடியேன் திருக்குடந்தை விடைகொண்டிருந்தபோது திருமாலை ஸேவிக்குமொருவர் சாத்துமுறைப் பாசுரத்தை "வழவழந்தவழமாழ" என்ருர்; அது ஆனந்தமாகவேயிருந்தது. இங்குத் தீவினையன்றே வந்து சேர்ந்தது; யாருடைய தீவினையோ? இதையெல்லாம் அச்சுக்கூடத்தார் தலையிலேற்றுவது அநியாயமேயாகும். மிக்க பரிதாபத்தினுல் இது எழுதுகிறேன்.

நம் ஆழ்வார்கள் இடையர்களை ஆனுயர் என்று கூறியிருப்பதுண்டு; பாதுகைக்காரர் ஆனுயரை ஆயனுராக ஆக்கிவிட்டார். தன்வாசகமாக ஆயனுர் என்றெழுதியதோடு நில்லாமல் "ஆனுயர் கூடியமைத்த" என்ற பெரியாழ்வார் பாசுரத்தை 'ஆயனுர்கூடியமைத்த" என்று வதம் பண்ணிவிட்டார். அந்தோ! இப்படி நாலா எட்டா? நூற்றுக்கணக்கிலன்றே குவிந்து கிடக்கின்றன. ருக்மிணியை ருக்மணி யென்றே நூறுதடவை யெழுதுகிருர்; இருபத்துமூன்று, இருபத்துநாலு......இவை இருபத்திமூன்றும் இருபத்திநாலுமாய்க் கிடக்கிறது.

இரவத்மூனு, இரவத்நாலு என்றில்லாமைக்கு உகந்திடுவோம். தங்கள் உக்திகளை இவர்கள் எப்படியாவதெழுதிக் கொள்ளட்டும்; அருளிச்செயற் பாசுரங்களை. அநியாயமாய்க் கொலைபண்ண வேண்டாமென்று அஞ்ஜலிசெய்து வேண்டுகிறோம். இவற்றையெல்லாம் அருளிச் செயற்புலியான ஸ்ரீமதாண்டவன் கடாக்ஷியாமலிருக்க முடியாதே; கடாக்ஷித்தருளி ஸஹித்திருப்பதுதான் வியப்பு

ஸ்ரீ ஆண்டாள்வைபவம் என்று ஆரம்பித்து (ஆடிமாதப் பாதுகையில்) முகப்பிலேயே திருப்பாவைத் தனியனில் ''பன்னுதிருப்பாவைப் பல் பதிகம்'' என்றுள்ளது. க்ராமீணர்கள் சிலர் இப்படி ஸேவிப்பதுண்டு பத்யம் என்கிற வடசொல் ''இணைந்தியல்காலை யரலக்கிகரமும்'' என்ற நன்னூல் விதிப்படி பதியமென்றாகியிருக்கிறது பதிகமென்று தசகத்திற்குப் பெயர்; முப்பது பாட்டிலே தசகங்கள் இல்லையோ? என்று கேட்பதை ஆண்டவன் ஸஹிக்கமாட்டார்

அடுத்தபடி ''வளர்ந்தது ஓர் கல்பக்கோடி'' என்றுள்ளது. ''கல்பகோடி சதேநாபி'' என்கிற பிரமாணத்திற்கு இங்கென்ன ப்ரஸக்தியோ? ''இழவுதறியாத தோர்'' ''கொம்மைப் புறக்குன்றர்'' என்றிங்ஙனே பாசுரக்கொலைகள் பல பல. குசேலர் கதையை யெழுதுகையில் ''துணிமுடிம்பிடிலிருந்த மிகுதி அவலை'' என்றுள்ளது; முடும்பிடி என்பது என்ன பாஷையோ? பரச்சதம், பரஸ்ஸஹஸ்ரம் என்னும்படியானவற்றிலே இவ்வளவு போதுமிப்போது.

உபஸம்ஹார விஜ்ஞாபனம்;—குற்றங்குறைகளையெடுத்துக்கூறினால் யாருக்குமே கோபம் வருவது ஸஹஜமேயொழிய அதை பத்த்யமாக நினைப்பவர்கள் மிகச் சிலரே. குற்றமிருந்தால் அதை யெடுத்துக்காட்ட வேணுமோ? *குணதோஷௌ புதோ க்ருஹ்ணந் இந்துக்ஷ்வேளாவிவேச்வர:, சிரஸா ச்லாகதே பூர்வம் பரம் கண்டே நியச்சதி* என்று. குணமிருந்தால் அதைக் கொண்டாட வேண்டியதென்றும், தோஷமிருந்தால் அதை மறைத்திட வேணுமென்றும் சொல்லியிருக்க, இப்படி தோஷங்களை நிரம்ப எடுத்துக்காட்டுவது யுக்தமோ? என்று பண்டிதர்கள் நினையார்கள். உத்தரராம சரிதத்தில் பவபூதி தெரிவிப்பதொன்றை நினைவூட்டுகின்றேன். அயோத்திமாநகரை ஆண்டு வருகின்ற பெருமாள் தம்மைப்பற்றி ஆங்காங்கு என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார்களென்பதைத் தெரிந்துகொள்ள விரும்பி சாரர்களை நியமித்திருந்தாராம்; அவர்கள் ஆங்காங்குத் திரிந்துவந்து எங்கும் குணகீர்த்தனமேயா யிருக்கிறதென்றார்களாம்; இது இருக்கட்டும், தோஷகீர்த்தனங்களு மிருக்குமே, அதைச் சொல்லுவது என்றாராம் பெருமாள். இதனால் தோஷ ப்ரகடனத்தைத்தான் விரும்பி வரவேற்க வேணுமென்பது விளங்கும். தோஷங்களுக்கு இடமில்லாமலிருக்க வேணுமென்கிற நல்லெண்ணமே தூண்ட எழுதியவற்றை ஸ்ரீமதாண்டவன் தவறாக க்ரஹித்தருளமாட்டாரென்று தேறி நிற்கிறேன், ... .... ... ... *

ஆக இவ்வளவும் நாம் ஸ்ரீராமாநுஜன் 260ல் எழுதியிருப்பது. ஸ்ரீராமாநுஜனை ஒருவரும் பிரித்துக்கூடப் பார்ப்பதில்லை யென்பவர்கள் பிரித்துப்பார்த்து

விடையிறுக்க வெளிவந்து விட்டபடியால் நிச்சேஷமாக விடையிறுக்க வேண்டும். யுக்தமாகத் தோன்றும் விஷயங்களை "இவை யுக்தமாகவே யெழுதப்பட்டவை" என்று தெரிவித்து நிற்கவேண்டும், பண்டிதர் பல விஷயங்களைத் தொடாமல் விட்டிட்டார். அது மஹதே க்ஷேமாய. மனச்சாட்சியை மீறி யெழுதியிருக்கும் சில விஷயங்களைச் சிறிது விமர்சித்து நிகமிக்கிறேன். பொய்கைப்பிரான் பாசுர மொன்றில் *மண்தாவென இரந்து மாவலியை என்றுள்ளதை இரந்த மாவலியாக்கி ......இத்யாதி நாமெழுதியிருந்தோம். இதற்கு விடையளிக்கும் பண்டிதர் "பொய் கைப்பிரான் பிரிவு" என்று தொடங்குகிறார். எங்கள் கோஷ்டியில் பிழைதவிர வேறு கிடைக்கமாட்டாதென்று காட்டுகிறார் போலும். ஒரு மாமி தன் அகத்திற்கு வந்த மருமகப்பிள்ளைக்குக் கூழ்காய்ச்சிப் பரிமாறினாள். அதையுண்ட மருமகப் பிள்ளை 'அம்மாமீ! கூழ் டிட்டிக்கிறது' என்றான், தித்திக்கிறதென்று சொல்ல வேண்டியதை டிட்டிக்கிறதென்று சொன்னதைப் பரிஹஸிக்க நினைத்த மாமி "மாப்பளைவாய் ரொம்ப டொட்டமாயிருக்குது" என்றாள். ஸ்பஷ்டமாயிருக்கிற தென்னுமல் டொட்டமாயிருக்குதென்றதைப் பரிகசிக்க நினைத்த மாமா "டண்டும் டண்டே" என்றார், 'இரண்டுபேருடைய வாக்கும் ஸ்பஷ்டந்தான்' என்று இதற்கு அர்த்தமாம். ஏவம் அத்ர கிம்? ஜ்ஞாஸ்யந்தி ஸர்வே புதா:,

இங்குப் பண்டிதரெழுதுகிறார்—பாசுரத்தின் அநுவாதம் தப்பாயிருக்கட்டும்; விவரணம் சரியாகத்தானே யிருக்கிறது; விரஸமாக விவரிக்கப் படுகிறதென்றது எப்படிப் பொருந்தும்? என்று. வைரஸ்ய ஸாரஸ்யங்களை ரஸிகர்கள் உணருவர்கள். எதிரே நின்ற ஒரு உலர்ந்த மரத்தை நோக்கி "சுஷ்கம் காஷ்டம் திஷ்டத்யக்ரே" என்றாரொருவர். மற்றொருவர் "நீரஸதருரிஹ விலஸதி புரத:" என்றார்! இரண் டுக்கும் பொருளொன்றே யன்றோ; அலம்.

இவ்விடத்தில் பண்டிதர் நம்மைக் கேள்வி கேட்கிறார்;—"87ம் பக்கத்தில் "இவை..... மாய்க்கிடக்கிறது—என்றிருக்கிறதே, இங்கு பன்மைக்கும் ஒருமைக்கும் எப்படிச் சேர்த்தி? இது அச்சுப்பிழையன்றோ" என்று.—கேட்ட கேள்விக்கு நாம் விடையிறுத்தே தீருவோம், இலக்கண நூல்கள் வழுவையுங் காட்டி வழுவமைதி யையும் காட்டியுள்ளன. நன்னூல் சொல்லதிகாரப் பொதுவியலில் "ஒருமையிற் பன்மையும் பன்மையினொருமையும், ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே" என்னுஞ் சூத்திரத்தை வல்லார்வாய்க் கேட்டுணர்க. நம்மாழ்வார் திருவாய்மலரத் தொடங் கின பாசுரத்தில் ' இனி யாமுறுமை" என்று கூறி உடனே "அடியேன் செய்யும் விண்ணப்பமே" என்றார். யம் என்றதற்குச் சேர அடியோம் என்றோ அடியே னென்றதற்குச் சேர யான் என்றோ திருத்தவேணுமிப் பண்டிதர். அல்லது ஆக்ஷேபிக்க வேணும், கூரத்தாழ்வான் (வரதராஜஸ்தவே) *அஜ்ஞோ யஜ்ஞே ச்வர கில ஜநேக்வாபி அதர்சம் விமர்சம்... ..தந்நிர்ணயம் வர்ணயாம:" என்றருளி யுள்ளார். இங்கும் ஆக்ஷேபிக்க வேணுமிவர், பெரியதிருமொழியில் "மேலை யகத்து நங்காய்! வந்து காண்மின்கள்". அலம்.

இங்கு மற்றொன்றும் எழுதுகிறார் பண்டிதர்—"யாசகம் செய்ததாக என்று படித்தவர்கள் எழுதத் தகாது; யாசனம் செய்ததாக என்றிருக்கவேண்டும்" என்று.

நம்மாழ்வார் திருவிருத்தத்தில் "வாசகஞ் செய்வது நம்பரமே" என்கிருர்; திருவாய் மொழியில் *என்கண் மலினமறுத்து* என்கிருர். இவை வடமொழி மர்யாதைக்குச் சேரா: தென்மொழிக் கட்டளைக்குச் சேரும். யாசகம் என்பதற்கு யாசக வ்ருத்தி யென்றே பொருள். மேலும் இது பரோக்தியின் அநுவாதமேயல்லது நம்முடைய ப்ரயோகமன்று. எப்படி யிருந்தாலும் இது அநவத்ய ப்ரயோகமே.

இதற்குமேல் ஒரு மஹத்தான அத்புத தூஷணம் கேண்மின். நாம் நித்யாநுஷ்டாநபத்ததி யென்று ஒரு க்ருதியை ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே வெளியிட்டிருந்தோம். நமது ஸஞ்சிகைகளைப் பிரித்துக்கூட ஒருவரும் பார்ப்பதில்லை யென்கிற பண்டிதர் தாம் பார்ப்பதோடு நில்லாமல் வித்வான்களும் பார்ப்பதைக் காட்டிக்கொண்டு, ஒரு வித்வான் தம்மிடம் வந்து அந்த நித்யாநுஷ்டானபத்ததியில் ஒரு வேத மந்த்ரம் வதம் செய்யப்பட்டிருப்பதாகச் சொன்னுரென்று (பக்கம் 14ல் முதல்வரியில்) எழுதியுள்ளார். அந்த பத்ததி நூலில் காலை துயில்விட்டெழுந்தது முதல் ராத்ரி சயனிக்குமளவும் ப்ராப்தமான அனுட்டானங்களைச் சுருங்க எழுதியிருப்பதோடு ஸந்தியாவந்தன மந்த்ரங்கள் திருவாராதன ப்ரக்ரியை தர்ப்பண மந்த்ரங்கள் எல்லாம் வரைந்திருக்கின்றேன். அதில் ஸந்தியாவந்தன ப்ரகரணத்தில் ஆயாது வரதாதேவி என்கிற மந்த்ரத்தில் காயத்ரீம்ச்சந்தஸாம் மாதா என்பது காயத்ரீ என்று விழுந்திருக்கிறதென்றும் இது மந்த்ரத்தை வதம் செய்ததாகவும் எழுதியுள்ளார் பண்டிதர். உலகமறிய இயம்புகின்றேனிங்கு; நான் என்னுடைய சொந்தநூல்களை மட்டும் வெளியிடுபவனல்லேன்! ஆளவந்தார் தொடங்கி மணவாளமாமுனிகளீருகவுள்ள ஸகல பூர்வாசார்யர்களினுடையவும் திவ்யஸூக்திகளைப் பலகால் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேன். ஆசார்யஹ்ருதயத்தில் *வேதவித்துக்களும் மிக்க வேதியரும் ச்சந்தஸாம்மாதாவாலும் அதுக்குத் தாயாய்த் தாயினுமாயின செய்யுமத்தாலும் பிறப்பிக்குமது இருவர்க்கும் ச்ரேஷ்ட ஜன்மம்* என்கிற சூர்ணையில் இந்த வேதமந்த்ரம் கையாளப்பட்டிருக்கிறது. அதன் வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் இந்த மந்த்ர சரீரத்தை உதாஹரித்தருளுகிருர். அந்த வியாக்கியானத்தை நான் தெலுங்கு லிபியிலும் தமிழ் லிபியிலும் பலகால் அச்சிட்டிருக்கிறேன். உலகமெங்கும் பரவியுள்ள அந்த ஸ்ரீகோசங்களை யெடுத்துப் பார்க்கலாம். "காயத்ரீம் ச்சந்தஸாம் மாதா" என்றே அச்சிட்டிருக்கின்றேன்; ஸந்தியாவந்தன மந்த்ரங்களை இளமையில் கற்பிக்கும் புரோஹிதர்கள் பலபல வைபரீத்யங்களுடன் கற்பிப்பது எங்குங் கண்டது. *அஹேடமாநோ வருணேஹ போதி* என்கிற ஸாய முபஸ்தான மந்த்ரத்தில் "உருசக்ம்ஸ மா ந ஆயுঃ ப்ரமோஷீঃ" என்பதைக் கற்பிக்கும் உபாத்யாயர்கள் [வேதமோதாதவர்கள்] இற்றைக்கும் நாளைக்கும் (உருசம்—ஸமாநঃ) என்றே கற்பித்து வருகிருர்ஙள். (உருசக்ம்ஸ) என்பது ஒரேபதம். (உருசக்ம்ஸேத்யுரு—சக்ம்ஸ) என்று அவக்ரஹ பாடமுமுள்ளது. இதை 'உருசம்—ஸமாநঃ' என்கிருர்கள், நாமும் இளமையில் அப்படி கற்று ஓதியிருப்போம். அத்யயனம் செய்த பிறகு பல திருத்தங்கள் பெற்றதுண்டு. (காயத்ரீச்சந்தஸாம்) என்றுநாம் கற்றது மில்லை, ஓதினதுமில்லை. நித்யாநுஷ்டானபத்ததியில் மந்த்ரங்களை தேவநாகரியி

லும் தமிழிலும் பதிப்பித்திருக்கிறோம். தேவநாகரியில் அநுஸ்வாரம் பல பிரதிகளில் ஸ்பஷ்டமாகத் தெரிந்தும் சில பிரதிகளில் அஸ்பஷ்டமாயுமுள்ளது. மலையேறி எலிபிடித்த கதையாய் இப்பண்டிதர்கள் வெகு சிரமப்பட்டுத் தேடிப்பிடித் தெடுத்துக் காட்டுகிறார்களிதை, நாம் ஸொந்தமாக எழுதின நூல்களும் பதிப்பித்த பிற நூல்களும் ஆயிரக்கணக்கிலுள்ளன வென்பதை உலகமறியும். அவற்றிலெல்லாம் கண்செலுத்திச் சொற்பொருட் குற்றங்களை வெளியிட்டாராகில் உலகுக்கு மஹோபகாரமாகும்; அவ்வளவேயன்று, ஆத்மாவும் புனிதமாகும்.

ப்ரக்ருத விஷயத்தில் முக்கியமாக ஒன்று தெரிவிக்கிறேன். "காயத்ரி!" என்று ஸம்புத்தியாய் மேலே ஈம் என்றொரு பதமாய் "காயத்ரீம் ச்சந்தஸாம் மாதா" என்றே பாடமானாலும் காயத்ரீ என்று ப்ரதமாந்த பாடமுமுண்டென்று ஒரு பாஷ்யகாரர் எழுதியிருப்பதுண்டு. இப்போது நாம் சென்னையிலிருந்துகொண்டு இஃதெழுதுவதால் கோசஸாமக்ரி யின்மையால் விவரித்தெழுதாது நிற்கிறோம். எங்கும் நாம் பதிப்பித்திருப்பது காயத்ரீ மென்றுதான். தைத்திரீய ஸம்ஹிதையில் மூன்றாவது காண்டத்தில் இரண்டாவது ப்ரச்நத்தில் ப்ரத்யவரோஹந்தி யென்கிற பதத்தில் ப்ரத்யவரோஹதி யென்று பாடாந்தர முண்டாகி இரண்டுபாடமும் தென்னாட்டில் வழங்கிவருகின்றது, இது காஞ்சியிலுள்ள வைதிகர்களுக்கு நன்கு தெரியும்; ஆரண்யகத்தில் ஆந்த்ரபாடம் த்ராவிடபாடமென்று இரண்டிருப்பது ஸாயணபாஷ்பத்தில் நன்கு காட்டப்பட்டுள்ளது, காயத்ரீச்சந்தஸாம் என்றால் குடிகெட்டுப் போய்விடாது. இது வேதமந்த்ரவதமாகாது. பாதுகா பத்ரிகை செய்திருக்கிற அருளிச்செயல்வதம் அபரிமிதம். அச்சுப் பிழையென்று சொல்லிப் பிழைக்கப்பார்ப்பது ஏலாது, ஸ்ரீமதே ராமாநுஜாய நம: என்பது ஸ்ரீ மாதா ரமா நிஜய நமஹா என்று விழுந்திருந்தால் அச்சுப்பிழை யென்னலாம். ப்ரக்ருத பண்டிதருடைய கட்டுரையில் (பக்கம் 15ல் வரி 6ல்) இதற்குச் பரிஹாரம் என்று காண்கிறது. இதை அச்சுப்பிழை என்றால் ஒக்கும். இப்படி ஒன்றா இரண்டா?

"ஒருவன் அகாராந்த: புல்லிங்கோ ராமசப்த:—என்று சொல்லிக் கொண்டிருந்தான்; அதைக்கேட்ட ஒரு மஹாவித்வான் மகாராந்த: புல்லிங்கோ ராம சப்த: என்னவேணுமென்று திருத்தினார்'

என்று ஓர் அசட்டுக் கதை எழுதுகிறார் பண்டிதர். சாஸ்த்ரஜ்ஞர்கள் இத்தகைய அசட்டுக் கதைகளை நெஞ்சாலும் நினைக்கமாட்டார்கள். இக்கதையும் காசித் காந்தா கதையும் பத்ரபூரணமாத்ரம். இவர்கள் உதாஹரித்த மஹாவித்வான் (மகாராந்த பும்லிங்கோ) என்று திருத்தவில்லை. ஃகாராந்த—ஔகாராந்த—ஈகாராந்த என்றே திருத்தினார். ஔசித்யம் அதில்தானே யுள்ளது. ... ... செவிக்கினிய செஞ்சொற்களைக் கேட்க ஆயிரவர் குழுமியுள்ளார்கள். கேட்டறியாதன கேட்க விரும்புகின்றார்கள். விடை கொள்ளுகிறேன். ... ... *

# அன்பர்களுக்கு அறிக்கை

மணவாள மாமுனிகளின் அறுநூற்றாண்டு நிறைவு நினைவு மலராக நாம் செய்திருக்கும் வெளியீடுகளில் ஸ்ரீவசனபூஷண ஸாரார்த்த தீபிகையும் ஒன்று. இது ஸித்தமாகி இரண்டு மாதங்களுக்கு மேலாயிற்று. ஆனால் இன்னும் வெளியிடப் படவில்லை. இதனை நாம் ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே வெளியிட உத்தேசித்திருக்கிறோம். ஏதோ காரண விசேஷங்களினால் தாமதப்பட்டு வருகிறது அடுத்த ஸ்ரீராமாநுஜனில் அது தவறாது வெளிவரும் அதற்காக யாரும் தனியே பணம் அனுப்ப வேண்டிய அவசியமில்லை விரைவில் கிடைத்துவிடுமென்று நம்பி எதிர் பார்த்திருக்கவேண்டியது

முமுக்ஷுப்படி ஸாரம், தத்வத்ரய ஸாரம், ஸ்ரீவசனபூஷண ஸாரம்—இவை மூன்றும் ஒரே புத்தகமாக பைண்டு செய்யப்பட்டுச் சென்ற மாதத்திலேயே வெளிவந்திருக்கிறது இதன் விலை 6 ரூ. தபால் செலவு 1-40 ஆகும். உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப்பிரபந்தம்—இவை பதவுரை பொழிப்புரையுடன் ஒரே ஸம்புடமாகவுள்ளது. விலை 3 ரூ.

முமுக்ஷுப்படி வியாக்கியானமும் தத்வத்ரய வியாக்கியானமும் (மணவாள மாமுனிகளருளிச்செய்தவை) விலை 10 ரூ.

ஸ்ரீவசநபூஷண வியாக்கியானமும் ஆசார்யஹ்ருதய வியாக்கியானமும் (மாமுனிகளருளிச்செய்தவை) விலை ரூ. 15.

(தெலுங்கு லிபி) ஸ்ரீவசனபூஷணவியாக்கியானம் மட்டும் (மாமுனிகளருளிச் செய்தது) விலை ரூ. 5.

ஸம்ஸ்க்ருத பாஷாமயங்களான ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதி க்ரந்தங்கள் தெலுங்கு லிபியிலும் தேவநாகர லிபியிலும் கிடைக்கும்.

ஸகல திவ்யப்ரபந்தங்களினுடையவும் ஸகல ஸ்தோத்ரங்களினுடையவும் (P. B. A. உரைகள்) ரூ. 100.

இவை கிடைக்குமிடம்:—

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.

---

விசேஷ அறிவிப்பு:— இச்சஞ்சிகையில் கீழே பக்கம் 12ல் ப்ரஸ்தாவித்துள்ள ஷண்மத ஸ்தாபன சர்ச்சை நூலை வாசிக்க விரும்புமவர்கள் "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன ஆபீஸ், 8, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி 17" என்னும் விலாசத்திற்கு 50 N.P. ஸ்டாம்பு வைத்தனுப்பினால் புததகம் இலவசமாகக் கிடைக்கும். ...



ஸ்ரீவில்லிபுத்தூர். ஸ்ரீமான் உவே. விஞ்சிமூர் K. ஸ்ரீநிவாஸாசாரியர் மதுரைமாநகரில் நடத்தும் பகவத்விஷய காலக்ஷேப கோஷ்டி.



ஸ்ரீமதுபயவே ஆடூர் ரங்கஸாமி ஐயங்கார்ஸ்வாமி
(வைகுண்டவாஸி) ஸ்ரீபெரும்பூதூரிலெழுந்தருளியிருந்தவர்
(பிரபல வித்வந்மணி)



ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீ பெரும்பூதூர்
எம்பார் ஜீயர் மடாதிபதி அப்பன்.
'சடகோபராமாநுஜ ஜீயர்ஸ்வாமி.



ஸ்ரீமதுபயவேதாந்த வித்வான்.
வேதவ்யாஸபட்டர். திருமலை
ஐயங்கார் ஸ்வாமி (கோயம்புத்தூர்)



ஸ்ரீமதுபயவே. கோயில்.
பெரியநம்பி
ரங்காசார்ய ஸ்வாமி.

ஸ்ரீமதுபயவே. கோயில்.
பெரியநம்பி
ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி.



ஸாதாரண ஸம்வத்ஸரம் புரட்டாசிமாதத்தில் (திருமலை) திருவேங்கடமுடையான் மஹோத்ஸவத்தில் ஸேவைஸாதித்த இயல்கோஷ்டி ஸ்வாமிகள்



ஸ்ரீமதுபயவே ஆஸூரி பெரிய ராமாநுஜாசார்ய
ஸ்வாமியின் ஜ்யேஷ்ட புத்ரரத்னம்
ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி—வியாகரண
வேதாந்த வித்வான். ஸ்ரீபெரும்பூதூர்.
(வைகுண்டவாஸி)



திருமணஞ்சேரி ஸ்ரீநிவாஸன்
ஸ்ரீ வெங்கடேசன்
ஸ்ரீவைஷ்ணவ தாஸர்கள்
Commercial Officer.





ஸ்ரீமதுபயவே. வடுகநம்பி திருவம்ச
திலகரான நியாயவேதாந்த
வித்வான். ரம்யவராசார்ய ஸ்வாமி
யும் திருக்குமாரனும்.
ஜாதரப்.



ஸ்ரீமதுபயவே உபயவேதாந்தபுரம்
V. ராஜகோபாலாசாரியர். M L.,
(மதராஸ் அட்வகேட்) வைகுண்டவாஸி



ஸ்ரீமதுபயவே. V N. வெங்கடவரதாசாரியர் ஸ்வாமி,
அட்வகேட். வேதவிலாஸ்—எழும்பூர்.



ஸகிந்தராபாத் ஸ்ரீ லக்ஷ்மீநாராயணன் ஸன்னிதியில் நெடுநாள் அதிகாரியாயிருந்த ஸ்ரீமதுபயவே. வானமாமலை ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி.



ஷை ஸன்னிதியில் இப்போது அதிகாரியாயெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபயவே. S தேவநாயகமையங்கார்ஸ்வாமி



சிகந்திராபாத் ஸ்ரீ வெங்கடேச பெருமாள் ஸன்னிதியில் மாமுனிகளின் 600 வது ஆண்டுவிழா ஐப்பசித் திருமூல சாத்துமுறை கோஷ்டி.



சிகந்தராபாத் ராமாநுஜ சங்கத்தாரால் நடத்தப்பட்ட ஐப்பசித் திருமூலம் மணவாள மாமுனிகளின் திருவுருவப்படத்தை பல்லக்கில் ஏள்ளப்பண்ணி ஸுப்ரபாத கோஷ்டி புறப்பாடு நடத்தியபோது ஸ்ரீலக்ஷ்மீ நாராயணன் ஸன்னிதியில் ஸேவை ஸாதித்த ஸந்தர்ப்பம்



சிகந்தராபாத் லக்ஷ்மீநாராயணன் ஸன்னிதியில் 600வது ஆண்டு ஐப்பசித் திருமூல மஹோத்ஸவ மங்களாசாஸன கோஷ்டி புறப்பாடு ஸந்நிவேசம்.



சிகந்திராபாத் லக்ஷ்மீநாராயணன் ஸன்னிதியில் 600வது ஆண்டு ஐப்பசித் திருமூலம் சாத்துமுறை கோஷ்டி.



சிகந்திராபாத் ராமாநுஜ சங்கத்தாரால் 600வது ஆண்டு ஐப்பசித் திருமூல ஸுப்ரபாத கோஷ்டி ரங்கநாதன் ஸந்நிதியில்.



ஸ்ரீமத்பரமஹம்ஸ. ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமியும் ஸ்ரீ ஸம்பத்குமார ராமாநுஜ ஜீயர்ஸ்வாமியுப் ஸேவைஸாதிக்கிருர்கள்.



நெடுநாள் மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகைக்கு ஆசிரியராயெழுந்தருளி யிருந்த உபயபாஷா மஹாவித்வான் குருநாராயணையங்கார்ஸ்வாமி
(வைகுண்டவாஸி)



முன்பக்கத்தில் ஸேவை ஸாதிக்கும் திருநாராயணையங்கார் ஸ்வாமியின் திருக்குமாரர். தமிழ்ப்பேராசிரியர் ஸ்ரீ உவே. அப்பணையங்கார் (மதுரை)
(வைகுண்டவாஸி)





ஆழ்வார் திருநகரியில் கார்த்திகைக் கைசிகத்வாதசியன்று
ஸ்ரீ மதுரகவிகள் திருவம்சத்தவரான ஸ்ரீமான் உவே:
அண்ணுவியார் ஸ்ரீநிவாஸாசாரியர் கைசிகபுராணம்
ஸேவித்து மர்யாதை பெற்று ப்ரஹ்மரத மலங்கரித்த காட்சி

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்தவுரைகள்
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்தவுரைகள்
3. ஸகல பூர்வாசார்யஸ்தோத்ர வுரைகள்
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்
5. இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்
6. ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்
7. வேதாந்தப் பொருள் விளக்கநூல்கள்
8. வேதலக்ஷணவிசார நூல்கள்
9. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்
10. லோகாபிராம உபந்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடுகள்
13. வடமொழி நூல் திரள்கள்
14. ஹிந்தி பாஷையில்
15. தெலுங்கு பாஷையில்
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
**KANCHEEPURAM-3.**



436. Sri Vengeepuram Raghavacharya Swami, Melkote, (Mysore State).

Edited and Published by P. B. Annangaracharya Swami for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press, Sannidhi Street, Kanchipuram-3.